செய்தவர்களுக்கு ஏதேனும் ஆபத்து வந்து விட்டால் அவர்களை வெட்டி எறிந்துவிட்டால் என்ன செய்வது. எனவே உடனடி படை எடுப்பு என்பதை நான் ஆதரிக்கவில்லை."

"அரையன் இராஜராஜன் நீ என்ன சொல்கிறாய்."

"நான் ஒரு நூறு வீரர்களோடுப் போய் இரவோடு இரவாக அவர்களுடைய மாளிகையைத் தாக்கி அவர்கள் இரண்டு பேரையும் எடுத்துக்கொண்டு நான் இந்தப் பக்கம் வந்து விடுகிறேன்."

"வருவதற்கு குந்தவை விரும்பவில்லை எனில்,"

"கயிறு கட்டி எடுத்து வர வேண்டியதுதான்."

"நல்ல யோசனை. ஆனால் நீர் போகக்கூடாது."

"வேறு யார் போக வேண்டும்."

"அதையும் யோசிக்க வேண்டும்." அடிக்குரலில் மன்னர் பேசினார்.

"இன்னொரு பிரச்சனையும் உங்கள் வீட்டு வாசலில் வந்து நிற்கிறது மன்னா." கிருஷ்ணராமன் சொல்ல, என்ன என்பது போல் பார்த்தார்.

"உங்களிடம் நேரே வர பயந்து, என்னிடம் வந்திருக்கிறார்கள்."

"யார்?"

"சோழ தேசத்து வணிகர்கள். நானாதேசிகள்."

"என்னவாம்?"

"ஸ்ரீ விஜயத்தில் அவர்களை கடுமையாகத் தாக்கி மிக மோசமாக தண்டித்து இருக்கிறார்கள்."

"யார்?"

ஸ்ரீ விஜயத்து படைகள்."

"எதனால்?"

"சோழ தேசம் எங்களுக்கு அடங்கியது. எனவே நாங்கள் இல்லாது சீன தேசத்தினர் சோழ தேசத்தினரோடு வியாபாரம் செய்யக்கூடாது. நடுவே எங்களைத் தாண்டித்தான் போக வேண்டும். எங்கள் மூலமாகத்தான் போக வேண்டும் என்று சொல்ல, அவர்கள் முறைத்திருக்கிறார்கள்."

"பிறகு."

"சோழ தேசத்தினர் சரி என்று சொல்லி இருக்கிறார்கள்."

"அடடே."

"ஆக, சீன தேசத்து வணிகர்களை பயமுறுத்த, அந்த வணிகத்தை நடத்திவிட்டு சோழ மரக்கலன்கள் கிளம்பியவுடன் அதை சுற்றிக் கொண்டு தீக்கிரையாக்கி அங்குள்ளவர்களை அடித்து இனிமேல் இந்தப் பக்கம் வராதே. நாங்கள் சொல்கிற வரைக்கும் இங்கு வரக்கூடாது. அது தான் சீனனுக்கு தண்டனை என்று சொல்லியிருக்கிறார்கள். அதேசமயம் சோழர்களை கடுமையாகத் தண்டித்திருக்கிறார்கள். நமது நானா தேசிகருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

"என்னவிதமான தண்டனை?"

"கொஞ்சம் கொடுமையாக இருக்கிறது."

"சொல்லுங்கள்."

"இரண்டு உள்ளங்கைகளையும் கத்தியால் செதுக்கி ஒன்றாக வைத்து கைகூப்பும்படி கட்டி விடுகிறார்கள். இருபது நாள் இருபத்தைந்து நாள் அப்படியே கட்டிப் போடப்படுகிறது. பிறகு கட்டைப் பிரித்துப் பார்த்தால் கைகளை விலக்க முடியவில்லை. இரண்டு தோலும் ஒன்றோடு ஒன்று ஒட்டிக் கொண்டு வளர்ந்துவிடுகிறது. அப்படி வளர்ந்து விடும்படியான மருந்தும் அவர்கள் அதில் தடவி விடுகிறார்கள்.

ஆக ஆயுதம் எடுக்க முடியாமல், படகு செலுத்த முடியாமல், மூட்டை தூக்க முடியாமல், மூட்டை இறக்க முடியாமல் அந்த வணிகர்கள் கூப்பிய கையாகவே இருக்கிறார்கள்."

"எங்கே அந்த வணிகர்கள்?"

"என் வீட்டு வாசலில் இருக்கிறார்கள்."

"ஏன் என்னை நேரே வந்து சந்திக்கவில்லை. எதற்கு உங்கள் மூலமாக வருகிறார்கள். நானாதேசிகருக்கு என்னை என்ன பழக்கமில்லையா."

"பழக்கம் உண்டு. மாமன்னா, ஆனால் நாங்கள் வரும்போ தெல்லாம் நீங்கள் வேறு ஏதேனும் ஒரு தேசத்தில் மும்முரமான படை எடுப்பில் இருக்கிறீர்கள். அதனால்தான் நான் இங்குள்ளவர்களிடம் தெரிவித்தேன்."

"கூப்பியபடியே இருக்கிறதா."

"ஆமாம்."

"எங்கே, துணியை விலக்கு." ஒரு வணிகரின் துணியை விலக்க அவர் கூப்பிய கையோடு நின்றிருந்தார்.

ஊர் சபை எழுந்து நின்று அவரைப் பார்த்தது. வந்தியத் தேவர் அருகே போய் நின்றார். மெல்ல அவர் கையை தொட்டார்.

"நீங்கள் தொட்டாலும் வலிக்கிறது வந்தியத்தேவரே," என்று அவர் முனகினார்.

மன்னர் அந்தக் கையை பிரிக்க முயற்சிக்க, அலறல் இன்னும் பெரிதாக இருந்தது. மன்னர் அவனை விட்டுவிட்டார்.

"இதைத் தவிர இன்னொரு கொடுமையும் நடக்கிறது."

"என்ன அது?"

"இரண்டு கால் கட்டை விரல்களையும் வெட்டி விடுகிறார்கள்."

"அப்படி வெட்டிவிட்டால்?"

"நிற்க முடியாது, நடக்க முடியாது, ஓட முடியாது."

கம்பு ஊன்றி நின்ற ஒருவனை அழைத்து வந்தார்கள். அவரது இரண்டு கால்கட்டை விரல்களும் வெட்டப்பட்டு இருந்தன.

"அருண்மொழி" மாமன்னர் கர்ஜித்தார். அவர் முகம் சிவந்து காணப்பட்டது.

"நாகை விகாரத்தில் ஸ்ரீ விஜயத்து தூதுவர் இருக்கிறாரல்லவா."

"ஆமாம்."

"நமக்கு ஏதோ பரிசுப் பொருளை கொண்டு வந்தாரல்லவா."

"ஆமாம்."

அந்தப் பரிசுப் பொருளை சிதற அடித்துவிட்டு அவரை கைது செய்து கொண்டு வா. தஞ்சை சிறையில் அடைத்து விடு. இதை யாரேனும் தடுக்க முயன்றால்."

"புத்த பிட்சுக்கள் முயலுவார்கள்."

"பிரம்பால் அடி. கூசாது அடி. முன்பக்கம் தூதுவர், பின் பக்கம் கொள்ளையா. எந்த ஊர் நாகரீகம் இது. சோழன் இளிச்ச வாயனா அவனுக்கு அடங்கியவனா. என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான் ஸ்ரீ விஜயத்தில் ஸ்ரீ விஜயத்து மன்னனுக்கு இங்கு உள்ள புத்த பிட்சுகள் உளவு பார்க்க வந்திருக்கிறார்களா. மொத்த விகாரையும் தரைமட்டமாகிவிடும் என்று சொல்லுங்கள்."

"அப்படி எல்லோரையும் சந்தேகப்பட முடியாது."

"இல்லை. நான் எல்லோரையும் சந்தேகப்படுவேன். எப்போதும், எல்லோரையும் சந்தேகப்படுவேன். அது என் இயல்பு. புத்த பிட்சு என்பதால் அவனை ஒரு காலமும் சோழ தேசத்தின் நண்பன் என்று ஏற்க மாட்டேன். அவன்வன் அவன் தேசத்திற்கு உண்மையாக இருக்கிறான். நாம் தான் நம் தேசத்திற்கு உண்மையாக இல்லை."

"என்ன சொல்கிறீர்கள் மாமன்னரே." கிருஷ்ணன் ராமன் இரண்டு கையும் விரித்துப் பேசினார்.

"என் தங்கை இல்லையே. என் சோழ தேசத்துக்கு இல்லையே. சோழ தேசம் சரியாக இருக்க வேண்டுமென்றால் இப்படிப்பட்ட ஒரு அபத்தமான முயற்சியை செய்வாளா. சோழ தேசத்தை நாசமாக்க வேறு யாரும் வரவேண்டாம். சோழ தேசத்தில் உள்ளவர்கள் போதும்." மாமன்னர் இராஜேந்திரர் கிட்டத்தட்ட பிளிறினார்.

சோழ தேசத்து வணிகர்களுடைய பரிதாபமான நிலை அவருக்கு

கோபமூட்டியது. அவரை கையாலாகாதவன் என்று சொல்வது போல் இருந்தது.

"அருண்மொழி. உன்னிடம் வந்து இவர்கள் சொன்னார்களாமே நீ என்ன நடவடிக்கை எடுத்தாய்."

"அந்த மரக்கலனிடமிருந்து கொள்ளை அடிக்கப்பட்ட பொருள்கள் ஸ்ரீ விஜய மரக்கலனில் ஏற்றப்பட்டு இங்கு வந்து சேர்ந்தது. அதாவது தாங்களே நேரடியாக விற்பது போல ஸ்ரீ விஜயம் மாலுமிகள் நடந்து கொண்டார்கள். ஆனால் இந்த செய்தி இவர்கள் மூலம் வந்துவிட நான் உள்ளேயே சோதித்தேன். உள்ளே வரக்கூடாது என்று தடுத்தார்கள். இரண்டு பேரை வெட்டிப் போட்டேன். பயந்து பின்வாங்கினான். அதில் இருக்கின்ற அத்தனை பாய்மரங்களையும் கழற்றி தரைக்கு கொண்டு வந்துவிட்டேன்.

அதிலுள்ள பொருள்கள் அத்தனையும் கரையில் இறக்கி ஒரு பெரிய கிடங்கில் இறக்கிவிட்டேன். புத்த பிட்சுக்கள் இதற்கே மறுப்பு தெரிவித்தார்கள். தலையிட வேண்டாம். இது அரசியல் என்று அவர்களை தடுத்துவிட்டேன்."

"அந்த தூதுவர் எங்கிருக்கிறார்?"

"அங்கேயேதான் இருக்கிறார். ஆனால் அவர் இதில் தலையிடவே இல்லை."

"நல்லது. நான் மறுபடியும் சொல்லும் வரை சோழ தேசத்திலிருந்து எந்த கப்பலும் ஸ்ரீ விஜயம் நோக்கியோ அல்லது வேறு எந்த திசை நோக்கியோ பயணப்படக் கூடாது. இந்த வருடம் நீங்கள் கடல் கடக்கவில்லை என்றால் எந்தக் குறையும் வந்துவிடாது.

எனக்கு உடனடியாக கவனிக்க வேண்டிய வேலைகள் சிறிது இருக்கின்றன. அதை முடித்துவிட்டு வெகு நிச்சயம், நான் ஸ்ரீ விஜயத்தை தண்டிப்பேன். இது என் தாய் வானமாதேவியின் மீது ஆணை. இது தஞ்சையை காவல் காக்கும் நிசும்ப சூதனியின் மீது ஆணை. என் தந்தை இராஜராஜ பெருவேந்தர் மீது ஆணை." குரல் உயர்த்திச் சொன்னார்.

கூட்டத்தில் உள்ளவர்கள் 'இராஜேந்திர சோழர் வாழ்க' என்று கோஷமிட்டார்கள். 'திருமன்னி வளர' என்ற மெய்கீர்த்தியை படித்தார்கள்.

"இந்த சபை இப்போது கலையலாம். அடுத்த சபை எப்போது கூடும், எங்கு கூடும் என்று இப்பொழுது சொல்ல இயலாது."

"உடனடியாக தஞ்சை ஆதுரச்சாலைக்குப் போங்கள். குந்தவையாருக்கு நான் செய்தி அனுப்புகிறேன். இந்தக் கையை நிச்சயம் பிரிக்க முடியும். ரண சிகிச்சை செய்து இதை எடுத்து விடுவார்கள். கவலைப்பட வேண்டாம். உங்கள் கை பழையபடி சரியான வழிக்கு வரும். அதற்கு நான் உத்தரவாதம்." அந்த வணிகரை அணைத்துக் கொண்டுச் சொன்னார். அந்த வணிகர்கள் கண்கள் நீர் சொரிந்தன.

"வீரமாதேவி. எழுந்திரு. உன்னுடைய தலைமையில் நூறு வீரர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டு நீ வேங்கி தேசம் நோக்கிப் போ. அங்கு போய் எவரும் அறியாவண்ணம் குந்தவையையும், இராஜ நரேந்திரனையும் மீட்டுக் கொண்டு வா. குந்தவை எகிறினால் குத்திக் கொன்றுவிடு. இராஜநரேந்திரனை மட்டும் மீட்டுக் கொண்டு வா. மற்றபடி பெரும் போர் என்று வந்தால் சரணடைந்து விடும். பிறகு நான் வருகிறேன்."

"தேவையில்லை மன்னா. வெகு நிச்சயமாக நான் வெற்றி அடைவேன். குந்தவையை கொல்ல வேண்டிய அவசியம் கூட இருக்காது. பின் தலையில் அடித்து, இழுத்து வருவேன். அப்படி ஒருவேளை நான் சிக்கிக் கொண்டால் சரணடைய மாட்டேன் மன்னா. தற்கொலை செய்து கொள்வேன். எப்பொழுது கிளம்ப வேண்டும்?" வீரமாதேவியார் எழுந்து நின்று பேசினார்.

"ஐயன் எது சரியான நேரம்?"

"இன்று நல்ல நேரம். நாளையும் பரவாயில்லை. நாளை மறுநாள் அஷ்டமி வந்து விடுகிறது. பயணத்துக்கு நல்லதல்ல."

"தாக்குதல் அஷ்டமியில் இருக்கலாமா?"

"அற்புதமாக இருக்கலாம். அப்பொழுது இன்றே கிளம்பிவிடலாம்."

"இன்று என்றால் எந்த நேரம்?"

"உடனடியாக இப்பொழுதே, இந்த நிலையிலிருந்தே, அவர்கள் போருக்கு கிளம்புவதாக கிளம்பிவிடலாம்."

"சரி, அப்படியே ஆகட்டும். வீரமாதேவி நான் எங்கு இருக்கிறேன் என்று விசாரித்து விட்டு அங்கு வந்து என்னை சந்தித்து விட்டுப் போ" என்று விடை கொடுத்தார்.

வீரமாதேவி புயல் போல வெளியே போனார்.

மாமன்னர் மிகப்பெரிய சிந்தனையோடு கிருஷ்ணன் ராமன் வீட்டை விட்டு வெளியே வந்தார்.

ஒரு மனிதன் கையில் தூக்கு வாளி வைத்திருந்தான். அது மூடப்பட்டிருந்தது.

"என்ன அது?"

"பகல் சோறு."

"எங்கே இருந்து வருகிறாய்?"

"தஞ்சையில் தான் இருக்கிறேன்."

"தஞ்சையில் இருந்து கொண்டு பகல் சோறை கையில் கொண்டு வருகிறாயே, என்ன."

"இன்று வீட்டில் சமைக்கவில்லை."

"பிறகு."

"தஞ்சையிலுள்ள சோற்றுக்கடை வீதியில் சாப்பிட்டோம். அம்மாவிற்கு வாங்கிப் போகிறேன்."

"சோற்றுக்கடை வீதியா. எங்கிருக்கிறது அது?"

"கோவிலுக்கு மிக அருகிலேயே இருக்கிறது, அந்தணர்கள். எல்லோரும் சோற்றுக்கடை வைத்திருக்கிறார்கள்."

"அப்படியா, இது என்ன சோறு?"

"புளியஞ்சோறு."

"எடுத்து வா. பார்க்கலாம்." எடுத்து முகர்ந்தார். ஒரு பிடிவாயில் இட்டுக் கொண்டார். மணத்தது. வாயில் ருசித்தது. அடே, அற்புதமாக இருக்கிறதே."

"இதென்ன. அங்கு தனியாக ஒரு பணியாரம் செய்கிறார்கள். தேங்காய் புட்டு, வெல்லப்புட்டு என்று. அற்புதமாக இருக்கிறது. அது மட்டுமல்ல. ஆப்பமும், தேங்காய் பாலும் தருகிறார்கள்."

"வேறென்ன இருக்கிறது?"

"கெட்டி தயிர் சாதம், கதம்ப சாதம், அதுவும் தயார் செய்கிறார்கள். அதுவும் நன்றாக இருக்கிறது. ஆனால் ஒரு தயிர் சாதம், மூன்று மாடை. கொஞ்சம் விலை அதிகம் தான்."

"இந்த மாதிரி எத்தனை கடைகள் இருக்கின்றன?"

"பதினாறு, பதினேழு கடைகள் இருக்கின்றன. இன்னும் கடைகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள்."

"அருண்மொழி உனக்குத் தெரியுமா?"

"ஒருமுறை சாப்பிட்டிருக்கிறேன்."

"என்னை இதற்கெல்லாம் கூட்டிக்கொண்டு போகாதே. பாவை என்னோடு தேர் ஏறிக் கொள். நாம் நேராக சோற்றுக்கடை வீதி போகிறோம்" என்று ஏறிக்கொண்டார். மக்களுக்கு கை அசைத்தார். அவர் குதிரை சோற்றுக்கடை வீதி நோக்கிப் போனது, அவர் சாப்பிட போகவில்லை. தனியே போய் சிந்திக்கப் போகிறார் என்பது அங்குள்ள அனைவருக்கும் புரிந்தது.

ஆனால் உண்மையில் மன்னருக்கு பசித்தது. கோபம் அதிகமாகி கத்தியதால், உணர்ச்சி பொங்கியதால், பல் கடித்ததால், ரத்த ஓட்டம் அதிகமாகியதால் அதன் விளைவாக அடி வயிற்றில் அமிலம் சுரந்து கபகபவென்று எரிந்தது. ஏதேனும் சாப்பிட வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. அவருடைய தேர் வெகுவேகமாக சோற்றுக்கடை வீதி நோக்கி வந்தது.

ஒரு மாமன்னர் தனது மனைவியுடன் அந்த வீதிக்குள் நுழைவார் என்று அந்த வீதியில் உள்ள அந்தணர்கள் நினைக்கவே இல்லை.

★ ★ ★




சண்டேஸ்வரருக்கு சிவன் மகுடம் சூட்டுவது

# அத்தியாயம்



**வே**ங்கி நகரத்து எல்லையில் சேரதேசத்து மட்ட குதிரைகள் பதினைந்து, கயிறுகளால் பிணைக்கப்பட்டு எங்கோ விற்பனைக்கு கொண்டு போவது போல நடத்தி அழைத்துப் போகப்பட்டன. ஒரு மாட்டு வண்டியில் வைக்கோல் போருக்கு கீழே சேணங்கள் இருந்தன. அதற்கு பின்னே பைராகிகள் போல வேடமிட்டு சம்மந்தம் இல்லாமல் மாட்டுவண்டியை பின் தொடர்ந்தார்கள். அவர்களுக்குப் பின்னே கணவனும், மனைவியுமாய் இரண்டு பேர் குழந்தையை தூக்கிக் கொண்டு மாட்டு வண்டியை பின்தொடர்ந்தார்கள்.

நாலாபுறமும் உற்று பார்த்தபடியே மனைவியாக நடித்துக் கொண்டிருந்த வீரமாதேவி நடந்து போய்க் கொண்டிருந்தாள். வேங்கி தேசத்திலேயே குந்தவைக்கு காவலாக இருந்த போர்வீரன் தனது குழந்தையை அழைத்துக் கொண்டு அவளை வேங்கி தேசத்தின் எல்லையில் சந்தித்தான்.

வேங்கி தேசத்துக்குள் போய் வேலை சம்பாதிப்பவர் போல அவர்கள் மூட்டை முடிச்சுகளோடு நடந்து கொண்டிருந்தார்கள். அந்த மூட்டைக்குள் கேடயமும், கத்தியும், சுருள் வாளும், ஈட்டி முனைகளும் இருந்தன. அதற்கான கம்பு அந்த வீரன் கையில் இருந்தது. அவனுடைய தோளில் மூட்டையை சுமந்திருந்தது.

கோட்டை வாசலில் அவர்கள் தடுத்து நிறுத்தப்பட்டார்கள். விவரம் சொன்னதும் உள்ளே அனுப்பப்பட்டார்கள்.

"மனைவி லட்சணமாய் இருக்கிறாளாடா. இளவரசர் விஷ்ணுவர்தரிடம் போய் வேலைக் கேள். நிச்சயம் கிடைத்து விடும்" என்று வாயிற்காவலன்

உரக்கச் சொன்னான்.

"இவன் மேலைச் சாளுக்கியம். இப்பொழுதெல்லாம் வாயிற் காவல் மேலைச் சாளுக்கியத்திடம்தான் இருக்கிறது" என்று அடிக்குரலில் கொஞ்சம் வருத்தத்தோடு சோழ வீரன் சொன்னான்.

அதை வீரமாதேவி காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. அவள் பார்வையெல்லாம் எந்த அரண்மனையில் யார் இருக்ககிறார்கள் என்பதிலேயே இருந்தது. ஒவ்வொரு அரண்மனைக்கும் இடையே உள்ள தொலைவு அவள் குறித்துக் கொண்டே வந்தாள். பாதைகளை சரியாக கவனித்துக் கொண்டு வந்தாள்.

இராஜநரேந்திரனுக்கு முதலில் தகவல் தெரிவிக்கப்பட்டது. அவன் கதவு திறந்து கொண்டு வெளியே வந்தான். இவர்கள் போவதை பார்த்து திகைத்திருந்தான். பிறகு மாட்டுவண்டி வருவதை புரிந்து கொண்டான். தொலைவே வீரமாதேவி வருவதை பார்த்து விட்டு ஓடோடி வந்து அவள் காலில் விழுந்தான். தவறு. ஆனால் அந்த செய்கையில் அன்பும், நம்பிக்கையும் இருந்தன.

"என்ன இது. எதற்கு என் காலில் விழுகிறீர்கள்" என்று பதறிய கிராமத்துப் பெண்ணாய் தொடர்ந்து நடித்தாள்.

"உள்ளே வாருங்கள்." அவன் வீரமாதேவியின் கையை பிடித்து இழுத்து உள்ளே அழைத்துப் போனான்.

குந்தவை கூடத்திற்கு நடுவே உள்ள நாற்காலியில் அமர்ந்திருந்தாள். 'என்ன' என்பது போல் கால் மீது கால் போட்டுக் கொண்டு வீரமாதேவியாரைப் பார்த்தார்.

"இன்னும் பதினைந்து நொடிகளில் நீங்கள் வெளியே வரவேண்டும்" என்று வீரமாதேவி உத்தரவு இட,

"ஏன்?" என்று கேள்வி கேட்டாள்.

"எந்தக் கேள்விக்கும் பதில் கிடைக்காது. நான் என்ன சொல்கிறேனோ அதை செய்ய வேண்டும்."

"அதை செய்வதற்கு நாங்கள் ஒன்றும் உங்கள் அடிமை இல்லையே."

"இப்போதைக்கு என்னுடைய அடிமை. அடிமையாக இல்லாவிட்டால் அடி வாங்குகிற அடிமை."

"அடிப்பாயா."

"நிச்சயம் அடிப்பேன். கூசாமல் அடிப்பேன். சொல்லி சொல்லி அடிப்பேன்."

"நான் யார் தெரியுமா. இராஜேந்திரனுடைய தங்கை, நீ யார்?"

"நான் யார் தெரியுமா. இராஜேந்திரனுடைய மனைவி, வீரமாதேவி. சந்தித்து நாளாகிவிட்டது அல்லவா. அதனால் உனக்கு மறந்து போயிருக்கும்."

"உனக்கு இங்கு என்ன வேலை?"

"உனக்கு ஒரு வேலையும் இங்கு இல்லாதபோது, ஒரு வேலையும் இல்லாத உன்னை ஊருக்கு அழைத்து வருவது தான் என் வேலை."

"நான் இங்கு பட்டத்து ராணி."

"அப்படி தெரியவில்லையே. ஏதோ ஒரு குப்பை மேட்டில் அல்லவா உட்கார்ந்திருக்கிறாய். பட்டத்து ராணியினுடைய வீடா இது."

"இருளில் வந்து ஏன் கலகம் செய்கிறாய். அடேய் யாரங்கே?"

வீரமாதேவி முன்னேறி பளீர் என்று அவள் கன்னத்தில் அறைந்தாள். வாயைத் திருப்பி தலைமுடியை பிடித்து இழுத்தாள். இடுப்பிலிருந்து துணியை உருவி வாயை இறுக்கக் கட்டினாள். குரல் எழுவதற்கு முன் பின் மண்டையில் அடித்தாள். அந்த அடி தாங்காமல் குந்தவை மயங்கி விழுந்தாள். அவள் குந்தவையை இழுத்து வேறொரு வீரனிடம் கொடுக்க இரண்டு வீரர்கள் அவளை எடுத்துப் போனார்கள்.

மடமடவென்று குதிரைகளுக்கு சேணங்கள் மாட்டப்பட்டன். அதற்கு பின்னால் வந்த ஒரு தேர் சட்டென்று நின்றது. அந்த தேரில் குந்தவையை ஏற்றினார்கள். சட்டத்தோடு வைத்து இறுக்கக் கட்டினார்கள்.

"என்னோடு குதிரையில் வா" என்று சொல்லி இன்னொரு குதிரையை இராஜநரேந்திரனுக்கு கை காட்டினாள்.

இராஜநரேந்திரன் குதிரை ஏறினான். அதில் தெளிவு இல்லை. குதிரை ஏறி பழக்கம் இல்லை என்று தெரிந்தது.

"மாளிகையை தீக்கிரையாக்கிவிடுங்கள்' என்று சொல்ல, காவலுக்கு இருந்த சோழ வீரர்கள் மடமடவென்று மாளிகைக்கு தீ வைத்தார்கள். குதிரை ஏறினார்கள். முன்னே போன படை வீரர்களை பின்தொடர்ந்தார்கள். முன்னே போன் படைவீரர்களுக்கு நடுவே, வீரமாதேவியும், ராஜநரேந்திரனும் இருந்தார்கள். அதற்குப் பின் தேர் ஓடியது. தேருக்குப் பின்னே குந்தவைக்கு காவல் இருந்த சோழ வீரர்கள் இருந்தார்கள். வெகு வேகமாக யார் கவனத்தையும் கவரும் முன்னே அந்த இடத்தை விட்டு அகன்றார்கள்.

எல்லை வாசலுக்கு வந்தபோது தடுத்து நிறுத்தப்பட்டார்கள்.

"குந்தவை தேவியாருக்கு உடல்நலம் சரியில்லை. உடனடியாக அவர்களை எலும்பு முறிவுக்கான மருத்துவமனைக்கு அழைத்துக் கொண்டு போகவேண்டும்." இராஜநரேந்திரன் சொன்னான்.

"நீங்கள் மட்டும் இருக்கிறீர்கள். இந்தப் பெண்மணி யார்?"

"சேடியாக வந்திருக்கிறார். அவர்தான் வைத்தியம் செய்யப் போகிறார்."

"அப்படியா, நகர்ந்து கொள்ளுங்கள், நகர்ந்து கொள்ளுங்கள்" என்று சொல்ல, அவர்கள் தேருக்கு பின்னே ஓடிவந்து வீரமாதேவியை சோதித்தார்கள். ஆனால் தேர் விரைவாகப் போயிற்று.

திடீரென்று சிலபேர் விழித்துக் கொண்டார்கள்.

"எனக்கென்னவோ இது தவறாகப்படுகிறதே. பின் தொடர்ந்து மடக்குவோம்" என்று சொல்லி,

"அடேய் நில். அடேய் நில்" என்று உரக்கக் கத்தினார்கள்.

அவர்கள் வருவது தெரிந்து வீரமாதேவி ராஜநரேந்திரனை முன்னே போகும்படி உத்தரவிட்டாள். பிறகு குதிரை திருப்பினாள். இடுப்பிலிருந்து சுருள் வாளை எடுத்துக் கொண்டாள் அவளுக்கு பாதுகாப்பாக நான்கு வீரர்கள் நின்று கொண்டார்கள்.

நான்கு வீரர்கள் வழிமறித்து நிற்பதைக் கண்டதும் மேலைச்சாளுக்கிய

வீரர்களின் குதிரைகள் சறுக்கி நின்றன. என்ன என்பதுபோல் பார்த்தன.

"உண்மையில் நீங்கள் யார்?" என்று கேட்க, ஒரு ஈட்டி வீரமாதேவியின் கைக்கு மாறியது. மிக வேகமாக கேட்டவன் நெஞ்சில் செலுத்தப்பட்டது. அவன் குப்புற விழுந்தான். வீரமாதேவி முன்னேறி சுருள்வாளை வேகமாக சுழற்றினாள். அங்கு இருக்கின்ற நான்கு பேர் முகத்திலும், கையிலும், கால்களிலும் வாளின் வீச்சு விழுந்தது. அவர்கள் அலறி விழுந்தார்கள். இரண்டு குதிரைகளுக்கு காயம் ஏற்பட்டு அவை கனைத்து மேலே உள்ளவர்களை கீழே உதறி நாலாபுறமும் ஓடிற்று. எதிரே மடக்குவதற்கு ஆள் இல்லை என்பதால் வீரமாதேவி திரும்பினாள்.

மிக விரைவாக குதிரை செலுத்தினாள். வழியில் நூறு வீரர்களும் ஒன்று சேர்ந்து கொண்டார்கள். சற்று தள்ளி இன்னொரு நூறு வீரர்கள் ஒன்று சேர்ந்து கொண்டார்கள். திருவொற்றியூரில் நானூறு வீரர்கள் ஒன்று சேர்ந்து கொண்டார்கள். கிட்டத்தட்ட ஆயிரம் வீரர்கள் சேர்ந்த படை திருவொற்றியூரைத் தாண்டி திருமயிலை வழியாக மாமல்லபுரத்திலுள்ள ஒரு சோழ வீரனிடம் சரியான செய்தி சொல்லி அவனை இன்னும் முன்னே அனுப்பியது.

குந்தவைக்கு வைத்தியம் செய்யப்பட்டது. குந்தவை மௌனமாக காயத்தின் வலியை பொறுத்துக் கொண்டாள்.

"பெண்ணா இவள். ஆண்பிள்ளை போல் இருக்கிறாள். மார்பகம் உள்ள ஆண்களை நம்பக்கூடாது. மார்பகமே இல்லாத பெண்களை நம்பக் கூடாது என்று சாமுத்ரிகா லட்சணம் சொல்கிறது. ஆண் போல இருக்கிறாள். அலியைப் போல் இருக்கிறாள் என்றெல்லாம் முரட்டுத்தனமாக குந்தவை பேச, வீரமாதேவி கவசத்தை இறுக்க அணிந்து கொண்டு வெளியே வந்து அமர்ந்து கொண்டாள்.

மாமல்லபுரத்து மாளிகையில் எல்லோருக்கும் நல்ல உணவு தரப்பட்டது.

பெண்ணாக இருந்தாலும் கேலி, பெண்ணாக இல்லாது போனாலும் கேலி. அடடா. இந்த பெண்கள் வாழ்க்கை மட்டும் இந்த தேசத்தில் ஏன் இப்படி சூறையாடப்படுகிறது என்று வியந்தாள். ஆண்களுக்கு இணையாக எது செய்தாலும் அது ஏன் அதிசயமாக பார்க்கப்படுகிறது. எனக்கு புரியவில்லையே என்று வியந்தாள். இந்த நேரம் அருண்மொழிப்பட்டன் இருந்தால் ஏதேனும் பேச்சுத் துணையாக இருக்கும். இந்த வீரர்களோடு என்ன பேச, என்று தலைகுனிந்து உட்கார்ந்து கொண்டாள்.

வந்தியத்தேவராவது இருந்திருக்கலாம். அவரும் சரியாக விவரம் சொல்வார். உடனடியாக அவர்களை சந்திக்க வேண்டும் போல் இருக்கிறது என்று ஆசைப்பட்டாள்.

தொலைவிலிருந்து ஒரு குதிரை வீரன் வருவது தெரிந்தது. 'என்ன' என்று விசாரிக்க, மேலைச் சாளுக்கியப்படை பெரிதளவில் திருவொற்றியூர் நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது என்றும், இன்னும் ஒரு நாளில் திருவொற்றியூரை தொட்டுவிடும் என்றும், தொண்டை மண்டலத்தை ஒரே இரவில் கபளீகரம் செய்யப்பட்டு விடும் என்றும் சொல்லப்பட்டது.

எல்லோரும் துள்ளி எழுந்தார்கள். தொடர்ந்து தஞ்சைக்கு போக வேண்டிய அவசியத்தை உணர்ந்தார்கள். குந்தவையின் கை, கால்களை கட்டி யானையில் உள்ள அம்பாரியில் போட்டார்கள். பிறகு யானையை வேகமாக செலுத்திக் கொண்டு அவர்கள் தெற்கு நோக்கி விரைந்தார்கள்.

வீரமாதேவிக்கு சுரீர் என்று அடி வயிறு வலித்து இடுப்பு முறுக்கிற்று.

எண்ணாயிரம் எசாளம் வழியாக ஜெயங்கொண்டம். ஜெயங்கொண்டம் வழியாக கொள்ளிடக்கரை. கொள்ளிடக்கரை வழியாக குடந்தை. குடந்தை வழியாக பாபநாசம். பாபநாசம் தாண்டி கபிஸ்தலம். கபிஸ்தலம் தாண்டி தஞ்சை என்று வந்திறங்கினார்கள். அவர்கள் பயணப்படுவதற்கு ஒன்றரை நாள் பிடித்தது.

மீண்டும் ஒரு வீரன் வந்தான்.

திருவொற்றியூர் கோட்டை, கோவில் இரண்டும் மேலைச் சாளுக்கியர் வசம் பிடிபட்டு விட்டது என்று சொல்லப்பட்டது.

அவர்களுக்குள் பிளவு ஏற்பட்டு விட்டதாம். கலிங்க வீரர்கள் முன்னே போவதா, ஒட்ட வீரர்கள் முன்னே போவதா, கீழைச் சாளுக்கியம் முன்னே போவதா என்று சண்டை ஏற்பட்டு விட்டதாம். கீழைச் சாளுக்கியம்தான் முன்னே போக வேண்டும் என்று சொல்ல, "எங்களுக்கு போர் ஆசையே இல்லையே எங்களை ஏன் முன்னே அனுப்புகிறீர்கள்" என்று கேட்க, முன்னே போய்த்தான் ஆகவேண்டும் என்று கீழைச்சாளுக்கிய வீரர்களை பிரம்பால் அடித்திருக்கிறார்கள்.

எனவே, அந்த இடம் விட்டு அவர்களால் உடனே நகர முடியவில்லை என்ற செய்தி வந்தது.

தஞ்சை எல்லையின் வாசலில் இராஜேந்திர சோழர் குதிரையில் அமர்ந்தபடி வீரமாதேவியை வரவேற்றார். அருகே வந்ததும் அணைத்துக் கொண்டார்.

"எங்கே அந்த நாய்?" என்று கேட்டார்.

"யானையின் மீது படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறது" என்று வீரமாதேவி சொல்ல,

"அது கிடக்கட்டும்.

திருவொற்றியூர் வரை வந்துவிட்டதாகக் கேள்வி. அதனால் அரையன் இராஜராஜன் நேற்று படைவீரர்களோடு வேறுபக்கம் போயிருக்கிறார். மூன்று லட்சம் படை வீரர்கள் திருவொற்றியூரை நெருங்கிக் கொண்டிருக்கிறார்கள். எனவே அதைப் பற்றி கவலைப்படாதே. வா. வந்து குளித்துவிட்டு படுத்து உறங்கு. வேறு எங்கேனும் காயம் உண்டா" என்று கேட்க.

"கவசம் இறுக்கிய காயங்கள் தவிர வேறு எதுவும் இல்லை" என்று காட்டினாள். அந்த காயத்தை மாமன்னர் தடவிக் கொடுத்தார்.

பரவை நாச்சியார் கால் பிடித்துவிட, வீரமாதேவியார் அன்று இரவு அதிகம் தவித்தபடி உறங்கினாள்.

நாகையில் அருண்மொழியால் கைது செய்யப்பட்ட ஸ்ரீ விஜயத்தின் ஒரு முக்கியமான தளபதி. தஞ்சை சபையில் கொண்டு வந்து அமர்த்தப்பட்டான். அவனுக்கு துணையாக இரண்டு புத்த பிட்சுக்கள் வந்திருந்தார்கள். அந்த புத்த பிட்சுக்கள் தமிழர்கள் அல்ல. அவர்களும் ஸ்ரீவிஜயம் சேர்ந்தவர்களே. அவர்களை மரியாதை நிமித்தம் இங்கு என்று சொல்லப்பட்டது. ஆயினும் அவர்கள் பிடிவாதமாக அந்த தூதுவனுக்கு துணையாக வந்தார்கள். உற்று கவனிக்கையில் அவர்கள் கையில் இருந்த தழும்புகள் அவர்கள் யுத்தப் பயிற்சி பெற்றவர்கள் என்று தெளிவாகத் தெரிந்தன.

இந்த புத்த பிட்சுக்களில் யாரேனும் ஒருவர் இடுப்பில் வாள் மறைந்திருக்கலாம் என்று பரமன் மழபாடி அனுமானித்தார். சட்டென்று வீரர்களை அனுப்பி சோதனை செய்யச் சொன்னார். நாலு வீரர்கள் பிடித்துக் கொள்ள அவ்விதமாகவே உடைகள் களையப்பட்டன. இரண்டு

பேர் இடுப்பிலிருந்தும் 'டணார்' என்று வாட்கள் விழுந்தன.

"எனவே நீங்கள் புத்த பிட்சுக்கள் அல்ல. சரியா. பின் கை கட்டுங்கள்" என்று சொல்லி, பின் கை கட்டி, அவர்களது உடுப்பை பாதியாக கிழித்து வெறும் இடுப்பு துண்டாக வைத்து அவர்களை தரையில் அமர வைத்தார்கள்.

ஒரு புத்த பிட்சு தரையில் அமர வைப்பது சோழ தேசத்தில் அதுவே முதல் தடவை.

இராஜேந்திரர் அரண்மனை பரபரப்பாக இருந்தது. அந்த காலை வேளையில் எல்லா படைதளபதிகளும் வந்துவிட, குந்தவை அடித்து எழுப்பப்பட்டாள். முகம் கழுவப்பட்டாள். உடனடியாக அரண்மனைக்கு வரவேண்டும் என்று அவளுக்கு உடைகள் தரப்பட்டன.

"நான் இந்த கிழிந்த உடைகளோடே வருகிறேன்" என்று அந்த உடைகளை வீசி எறிந்தாள்.

இராஜநரேந்திரன் முன்னதாக ஓடிவந்து மாமாவின் காலில் விழ, அவனை இறுக்கி அணைத்துக் கொண்டார். கட்டி முத்தமிட்டார்.

"இத்தனை குழப்பத்திற்கு நடுவிலும் நீ தெளிவாக இருக்கிறாய் என்று உன் உடம்பு சூடு காண்பிக்கிறது."

"வீரமாதேவியார் வருவார் என்று நான் நினைக்கவே இல்லை. எங்கே அவர்?"

"அயர்ந்து தூங்குகிறார்கள். தூங்கட்டும் என்று விட்டு விட்டு வந்துவிட்டேன். விமலாதித்தனுடைய மனோநிலைமை என்ன?"

"மிக மோசமானதாக இருக்கிறது. சிற்றன்னையினுடைய பிடியில் சிக்கியிருக்கிறார். சிற்றன்னை மிகுந்த தந்திரசாலி. என் அம்மாவோ பைத்தியக்காரி. கெஞ்சி, கொஞ்சி தன்னுடைய வழிக்கு தகப்பனாரை மாற்றுகிறார். அவ்வப்போது நம் அன்னையை சீண்டி விடுகிறார். சிறிது சீண்டலுக்கும் எகிறு கின்ற குந்தவை தேவியார் அந்த பெண்மணியின் சீண்டலுக்கு அதிகமாக குதிக்கிறார்.

உதாரணமாக குந்தவை தேவியார் வந்தால் அந்தப் பெண்மணி எழுந்து

நின்று வரவேற்பாள். காலில் விழுந்து வணங்குவார். பிறகு விமலாதித்தருக்கு அருகே போய் அமர்ந்து கொள்வார். விமலாதித்தருக்கு அருகே போய் அமர்ந்து கொண்டதும் குந்தவை தேவியாருக்கு அருகே போய் உனக்கு அங்கே உட்கார தகுதியில்லை தள்ளிப் போ. வேறிடத்தில் உட்கார் என்று சொல்லி அவருடைய வலப்புறத்தில் வந்து உட்கார்ந்து கொள்வார்கள். இடப்புறம் காலியாகத்தான் இருக்க வேண்டும் என்று சொல்லுவார்கள். அந்த பெண்மணியும் சரி என்று கேட்டுக் கொண்டு விலகி நிற்பார்கள். விமலாதித்தருக்கு அவர்கள் விலகி நிற்பதும் இவர்கள் அலட்சியம் செய்வதும் மிகக் கோபத்தை ஏற்படுத்தும்.

ஏன் அவர்களை விலகி நிற்கச் சொல்லுகிறாய். அவளுக்கும் உரிமை உண்டல்லவா என்று ஆரம்பிப்பார். அவளுக்கு உரிமை இல்லை என்று இவர்கள் பேச, உண்டு என்று அவர்கள் பேச, அன்றைக்கு சபை முழுவதும் இந்த சண்டையாகவே முடியும். ஜனங்கள் நன்றாக சிரித்து ரசிப்பார்கள். ஆபாசமாக இருக்கும்.

குந்தவை தேவியார் திருவாதிரை அன்றைக்கு கோவில்லுக்கு போகிறார் என்றால் அந்தப் பெண்மணியும் வந்துவிடு வாள். 'எனக்குத்தான் முதல் பூஜை' என்று அம்மா பரபரக்க, சரி. அவர்களுக்கே செய்யுங்கள் என்று அந்தப் பெண்மணி விலகி விடுவாள். விலகி நின்று மக்கள் கூட்டத்திற்கு நடுவே உட்கார்ந்து சிரித்து, சிரித்து பேசுவார்கள். குந்தவை தேவியாரை யாருமே சீண்ட மாட்டார்கள். அவர்கள் தனியாக பூஜை முடித்து அவர்களுடைய வீரர்களுடன் திரும்ப, பெரிய மக்கள் கூட்டத்தோடு அவர்கள் கோவிலுக்குள் நுழைவார்கள். இதை பார்ப்பதற்கே அம்மாவுக்கே எரியும், கோபம் வரும்.

"அவளை எப்படியாவது கொலை செய்ய வேண்டுமடா" என்று என்னிடம் கிசுகிசுப்பார்கள். நான் மௌனமாக இருப்பேன்."

"விஷ்ணுவர்தனை சண்டைக்கு இழுத்து கொன்றுவிடேன்" என்று சொல்லுவார்கள்.

"யார் அது விஷ்ணுவர்தன்?"

"அந்தப் பெண்மணியின் புதல்வன். விமலாதித்தருடைய இரண்டாவது மகன். என்னுடைய சகோதரன்."

"விஷ்ணுவர்தனனா. ஓஹோ. சைவம், வைணவம் என்று

பிரிக்கிறார்களா."

"பல்வேறு விதமாக பிரிக்கிறார்கள். நான் தமிழ் பேசுகிறேன், அவர்கள் தமிழ் பேசுவதில்லை. தெலுங்கு பேசுகிறார்கள். கன்னடம் பேசுகிறார்கள். ஒட்டர்கள் மொழியில் பேசுகிறார்கள். மறந்து போய் கூட தமிழில் பேசுவதில்லை."

"உன் அம்மாவிற்கு ஏதோ கெட்ட பெயராமே."

"ஆமாம். 'ஆடகோத்தி' என்று அழைக்கிறார்கள்."

"ஆடகோத்தி என்றால்?"

"பெண்குரங்கு என்று அர்த்தம். குந்தவை என்ற பெயரே கீழைசாளுக்கியத்து மக்களுக்கு தெரியாது. ஆடகோத்தி என்பது தான் இவர்களுக்கு அவர்கள் வைத்த பெயர்."

"எவ்வளவு அவமானமடா."

"மாமா. நான் எவ்வளவு அவஸ்தைபட்டிருப்பேன் என்று உங்களுக்குத் தெரியுமா. உண்ண முடியாமல், உறங்க முடியாமல் நான் கழித்த தினங்கள் அதிகம்."

"எனக்கு புரிகிறது. குந்தவையை வரச் சொல்லுங்கள்." அரசர் ஆணையிட்டார்.

குந்தவை அழுக்கடைந்த ஆடையுடன், கலைந்த தலையுடன் ஒரு சபைக்குள் அலங்கோலமாக நுழைந்தாள். உட்கார ஆசனம் தேடினாள்.

"நில்லுங்கள்" என்று கண்டிக்கப்பட்டாள். அவள் அலட்சியமாக நிற்க, இராஜேந்திர சோழர் அவளை மிகுந்த வெறுப்போடு உற்றுப் பார்த்தார்.

"என்ன பார்க்கிறாய். என்னை இரவோடு இரவாக ஒரு பெண்ணை விட்டுத் தூக்கி வரச் செய்து என்னை அசிங்கப்படுத்தி விட்டாயே. எனக்கு எவ்வளவு பெரிய அவமானம் இது" என்று சொல்ல, இராஜேந்திரர் பதில் சொல்லவில்லை.

"இதுதான் நீ ஆட்சி நடத்துகின்ற இலட்சணமா. இதுதான் நல்ல ஆட்சியா. யார் சொன்னார்கள் நீ நல்ல ஆட்சி நடத்துவதாக. என்

தகப்பனாருக்கு உறை போட காணுவாயா" என்று சீறி முன்னே வர,

"அங்கேயே நில். ஆட கோத்தி" என்று மாமன்னர் கட்டளை இட்டார்.

பெண் குரங்கு என்று மன்னர் தன் தங்கையை சபை நடுவே விளித்தது சிரிப்பொலியை வரவழைத்தது. ஒரு மன்னர் தன் தங்கையை அப்படி அழைப்பது சிரிப்பதற்கான விஷயம் அல்ல. ஆயினும் சிரிப்பதை தவிர்க்க முடியவில்லை.

"வீட்டுக் காவலில் இருப்பதாக நடித்தாயல்லவா. இப்பொழுது நீ வீட்டுக் காவலில் தான் இருக்கப் போகிறாய். அரண்மனையின் அந்தப் பகுதியில் உனக்கு உண்ண உணவும், உடுத்த உடையும், குளிப்பதற்கு உண்டான வசதியும் செய்து தரப்படும். நீ அந்த இடத்தை விட்டு ஒருகாலும் எங்கும் போக முடியாது.

வேங்கி தேசத்தை நோக்கி படை எடுப்பு நடக்கும்போது அந்த படை எடுப்புக்கு இராஜ நரேந்திரன் தலைமை தாங்குவான், முன்னே போய் நிற்பான். வேங்கியுளுள்ள உன் புருஷனோடு போரிடுவான். தன்னுடைய பட்டாபிஷேகத்தை தானே நின்று நடத்திக் கொள்வான். யார் தயவும் இராஜ நரேந்திரனுக்கு தேவையில்லை. அவனுக்கு பின்புலமாக அவன் மாமன் இராஜேந்திரன் இருக்கிறான். இந்த ஒரு தைரியம் போதும்."

சபை 'ஆஹா, ஆஹா' என்று அங்கீகரித்தது.

"குந்தவை இந்த இடத்தை விட்டு போய்விடு. இனிமேல் நீயும், நானும் பேச வேண்டிய அவசியம் இல்லை. போ" என்றான்.

உள்ளே கையில் ரத்தம் ததும்பிய துணிக்கட்டுடன் அருண் மொழிப்பட்டன் உள்ளே நுழைந்தான்.

"தவறு நேர்ந்துவிட்டது மன்னா."

"என்ன?"

"நான் ஒரு புத்த பிட்சுவை அடித்து, நெஞ்சில் கத்தி வைத்து இறக்கி கொன்றேன். அடுத்தவன் பக்கத்திலுள்ள வீரனின் ஈட்டியை பிடுங்கி தன் வயிற்றில் சொருகிக்கொண்டு இறந்து போனான். ஆக நாம் நினைத்தபடி ஸ்ரீ விஜயத்துக்கு செய்தி அனுப்ப முடியாமல் போகிறது."

"அதனாலென்ன, நாகை விகாரத்தில் உள்ள புத்த பிட்சுகள் இரண்டு பேரைப் பிடி. முதுகில் அடி. அவர்களை படகில் ஏற்றி நேராக ஸ்ரீ விஜயம் நோக்கி போகச் சொல்.

சிறு நாவாய் கொடு. இங்கே என்ன நடக்கிறது என்று விவரம் சொல். நாகையில் காவல் இருப்பது யார்?"

"உங்கள் மகன் இராஜாதித்தன்."

"இராஜாதித்தன் அங்கிருக்கும் வரை நாம் ஏன் கவலைப் பட வேண்டும் அருண்மொழி. இராஜாதித்தனுக்கு இங்கு நடக்கின்ற விஷயங்கள் மொத்தமும் சொல்லி அங்கு பலமான காவலை ஏற்படுத்தச் சொல். எவரையும் சந்தேகப்படச் சொல். புத்த பிட்சுக்களை நம்பக்கூடாது என்று எச்சரித்து வை. ஸ்ரீ விஜயத்தில் வணிகர்களுக்கு ஏற்பட்ட அட்டகாசத்தை அவனுக்கு விவரமாகச் சொல்.

நாகையில் கட்டுப்பாடுகள் அதிகமாகட்டும்."

"வேங்கி நோக்கிப் போவது எப்போது?"

"அது நாளை விவாதிப்போம். நல்ல நாள் என்னவென்று ஐயன் அவர்கள் சொல்லட்டும். ஐயன் சொன்ன தேதியில் எத்தனை படைகள் திரட்ட முடியும் என்பதை பார்ப்போம். திருவொற்றியூர் வரை மட்டுமே நான் அரையன் ராஜராஜனை அனுப்பியிருக்கிறேன். அரையன் ராஜராஜன் அங்கேயே இருப்பார். எப்போது அவசியமோ அப்போது வேங்கிக்குள் நுழையலாம்."

"மன்னா இன்னொரு பிரச்சனை வந்திருக்கிறது." அரண்மனை உள்ளிருந்து பரவையார் ஓடிவந்து மன்னர் காதுக்கருகே வந்து

"ஒரு பிரச்சனை."

"என்னது?"

"வீரமாதேவியார் கருவுற்றிருப்பார் போல் தெரிகிறது. கரு கலைந்துவிட்டது."



# அத்தியாயம்




"கர்ப்பம் கலைதலா, வீரமாதேவிக்கா. அப்படி ஒரு விஷயம் சொல்லப்படவே இல்லயே. அப்படி ஒரு விஷயம் உடம்பில் இருப்பதாய் அவள் வெளிக்காட்டவே இல்லையே. இவ்விஷயத்தை வேறு யாரிடமாவது சொல்லியிருந்தாளா. அவசரமாக இராஜேந்திர சோழர் வீரமாதேவியின் அறையை நோக்கி நடந்தார்.

அந்த அரண்மனையிலுள்ள மிகப் பெரிய கூடம் ஒன்று பல அறைகளாக தடுக்கப்பட்டிருந்தது. மிக உயரமான மேல் தளம் கொண்ட அந்த கூடத்திற்கு பல்வேறு இடத்தில் வெப்பக் காற்று உள்ளே போவதற்கான வட்ட சாளரங்கள் இருந்தன. அந்த வட்ட சாளரங்கள் வழியாக வெளிச்சம் வந்தது. அது தவிர ஒவ்வொரு அறைக்கும் மிகப்பெரிய கம்பி சாளரங்கள் இருந்தன.

அறைக்குள் பெரிய கட்டிலும் உட்காருவதற்குண்டான மர நாற்காலிகளும், உணவுப் பண்டங்களை வைப்பதற்குண்டான உயர்ந்த பீடமும், துணிமணிகளை அடுக்கி வைப்பதற்குண்டான மூடி போட்ட மரக் கூண்டுகளும் இருந்தன. குடிநீர் பானைகள் இருந்தன. ஒவ்வோர் அறையிலும் கதவு திறந்தால் வெளிப்பக்க கழிவறைகள் இருந்தன.

இராஜேந்திர சோழர் வீரமாதேவியை நோக்கி போகும் போது அதிகாரிகளில் சிலர் பரபரப்பாக துணிகளோடு வெளியே வந்தார்கள். அந்த துணி முழுவதும் இரத்தம் இருந்தது. இராஜேந்திர சோழர் அதிர்ந்து போனார். கிட்டத்தட்ட கையை வெட்டினால் என்ன இரத்தம் இருக்குமோ அந்த இரத்தம் துணிகளில் இருந்தது.

"என்ன இது?" அவர் வாங்க முற்பட, அதிகாரிச்சிகள் அவரை தொடவிடாமல் பின்னே நகர்ந்து கொண்டார்கள்.

"யாருக்கு இவ்வளவு இரத்தம், வீரமாதேவிக்கா." அவர் உள்ளே போக, அவருடைய முக்கியமான மனைவியான முக்கோ கிழானடி வேண்டாம் என்று தடுத்து விட்டார்.

"ஏன்? நான் உள்ளே போனால் என்ன?"

"இப்பொழுது நீங்கள் வீரமாதேவியை பார்க்கக்கூடாது."

"ஏன் பார்த்தால் என்ன?" அவர் கொஞ்சம் கோபத்தோடு கேட்டார்.

"இப்பொழுது நீங்கள் வீரமாதேவியை பார்த்தால் பிறகு உங்களுக்கு அவளை பார்க்கவே தோன்றாது. வீரமாதேவிக்கு இந்த நிலைமையில் நீங்கள் அவளை பார்ப்பது சிறிது கூட விருப்பம் இருக்காது."

"ஒருவேளை இது அவளுக்கே தெரியவில்லையோ."

"இல்லை. அவளுக்கு தெரிந்திருக்கிறது."

"எதை வைத்து சொல்கிறாய்."

"பச்சை மாங்காய் துண்டுகள் நறுக்கி உப்பிட்டு வைத்திருக்கிறாள். அடிக்கடி உண்கிறாள். தினமும் விடியற் காலையில் மூன்று, நான்கு துண்டுகள் மென்று மென்று தின்கிறாளாம். இதற்கு என்ன அர்த்தம். வாய்க்கு அவ்வளவு புளிப்பு தேவைப்படுகிறது. வயிற்றில் குழந்தை உண்டாகும் பொழுது ஏற்படும் இரசாயன மாற்றம் அது. குமட்டல் வரும். அந்த குமட்டலை நீக்கவும் இந்த புளிப்பு உதவி அவசியம்."

"எனக்கு இந்த விஷயங்களை எல்லாம் புரிந்து கொள்ளவே முடியவில்லை. எதற்காக இரகசியமாக, வீரமாதேவி இந்த விஷயத்தை வைத்துக் கொள்ள வேண்டும்."

"பிற்பாடு சொல்லலாம் என்று நினைத்திருக்கலாம்."

"அப்படி இருக்கிறவள் எதற்காக கீழைச்சாளுக்கியம் போக வேண்டும்."

"நீங்கள் கட்டளை இட்டதால் போயிருக்கலாம்."

"இப்படி இருக்கிறாள் என்று தெரிந்தால் நான் கட்டளையிடுவேனா."

"வேறு யாரும் அந்த வேலையில் ஈடுபட்டு தவறாகச் செய்து அதனால் உங்களுக்கு அவமானம் வரக்கூடாது என்ற எண்ணமாக இருக்கலாம்."

ஆக சோழ தேசத்தில் ஒரு வேலை செய்வதற்கு வீரமா தேவியை விட்டால் வேறு ஆளே இல்லை. அப்படித்தானே. இது அதிகப்பிரசங்கித்தனமாக இல்லை. கர்வத்தினுடைய உச்ச கட்டமல்லவா இது. போரில் ஈடுபட தெரிந்து விட்டது என்றால் அதை எந்நேரமும் பிரகடனப்படுத்திக் கொண்டே இருக்க வேண்டுமா. என்னிடம் சொல்லக் கூடாதா. நான் அருண்மொழி யைத் தான் அனுப்ப வேண்டும் என்று நினைத்திருந்தேன். இவள்தான் உள்ளே புகுந்து நானே போகிறேன் என்று சொன்னாள். அதற்கு ஆயிரம் காரணங்கள் வேறு கற்பித்தாள். இப் பொழுது இந்த அவஸ்தை.

"வலி இருக்குமா?"

"இது என்ன கேள்வி."

"அதிகம் வலி இருக்குமா."

"போதும். நீங்கள் தயவு செய்து போய் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்."

"எனக்கு ஏது ஓய்வு. ஓய்வு என்றால் மல்லாக்க படுத்துக் கொள்வதா. இல்லை. ஓய்வு என்றால் உள்ளுக்குள்ளே கொதிக்கின்ற சிந்தனை இல்லாதிருத்தல். எப்போது நான் அரச பதவியை ஏற்றேனோ அன்றிலிருந்து இன்றுவரை கொதிக்கின்ற பிரச்சனைகள் தான் என்னைச் சுற்றி இருக்கின்றனவே தவிர யாராலும், எவராலும் நான் நிம்மதியாக இல்லை. இருக்க முடியவில்லை.

எனக்கு தங்கை ஒருத்தி. பிசாசாக வந்து வாய்த்திருக்கிறாள். முட்டாளாக ஒருவன் மாப்பிள்ளையாக மருமகன் இருக்கிறான். நண்பன் என்று சொல்லி என்னை ஏமாற்றுகின்ற ஸ்ரீ விஜயத்து மன்னன் இருக்கிறான். நாகையில் வந்து உளவாளி களாக செயல்படுகின்ற ஒற்றர்கள் இருக்கிறார்கள். எல்லா விதங்களிலும் ஒரு அரசன் ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்க, வீட்டுக் குள்ளும் அவன் ஏமாற்றப்படுகிறான் என்றால் இதைவிடப் பெரிய வேதனை ஒரு மனிதனுக்கு என்ன இருக்க முடியும்.

என்னுடைய மனைவியே என்னிடம் விஷயங்களை மறைக்கிறாள் என்றால் நான் யாரிடம் போய் அழுவது, வீரமாதேவியை அடிக்க வேண்டும்போல் இருக்கிறது."

"இன்று ஒருநாள் அமைதியாக இருங்கள். நாளை சரியாகி விடும். கருவிலுள்ள மொத்த திசுக்களும் வெளியே வந்து விட்டால் வயிறு சுத்தமாகிவிடும். கருப்பை சுத்தமாகி விட்டால் நன்கு தூங்க ஆரம்பித்து விடுவாள். பிறகு போஷாக்கான உணவுகள் கொடுத்து, நல்ல மருந்துகள் கொடுத்து சீர்செய்து விடலாம்."

"இங்கு வைத்தியர் வேண்டுமா?"

"அதிகாரிச்சிகள் பலபேருக்கு இந்த வைத்தியம் தெரியும். குந்தவை அத்தைக்கு நான் செய்தி அனுப்பி இருக்கிறேன். அவர் தக்க வைத்தியரை அனுப்புவார்.

வைத்தியர் வருவதற்குள் இந்த இடத்தையும், அவளையும் சுத்தப்படுத்த வேண்டும் என்று தான் நாங்கள் வேகமாக செயலாற்றிக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது உள்ளே வரவே வராதீர்கள். பரவை என்ன நிற்கிறாய். கூட்டிக் கொண்டு போ." முக்கோகிழானடி பல் கடித்து கோபித்துக் கொள்ள, பரவை அவர் புஜத்தை பிடித்து இழுத்தாள். அவருக்கு பரவை மீது கோபம் வந்தது.

"ஒரு நாள் நீ அடி வாங்கப் போகிறாய். யார் மீதோ இருக்கின்ற வெறுப்பை உன்மீது காட்டப் போகிறேன். என்னை உன் வழிக்கு இழுத்துக் கொண்டு போய்விடலாம் என்று ஒரு பெரிய கர்வம் உன்னிடம் இருக்கிறது. அதை என்னிடம் செலுத்தாதே. எனக்குப் பிடிக்காது."

"நீங்கள் அடிப்பதற்கெல்லாம் பயந்துவிட மாட்டேன். உங்களுக்கு எங்கள் மீது பிரியம் மிக அதிகம். மிக மிக அதிகம். அதுதான் கோபமாக வருகிறது. உங்கள் கொஞ்சல் எவ்வளவு வேகமாக இருக்குமோ அதேபோல உங்கள் கோபமும் வேகமாக இருக்கிறது. நீங்கள் எங்களை மட்டும் இப்படி நேசிக்கவில்லை. இந்த மொத்த சோழ தேசத்தையும் நேசிக்கிறீர்கள். உங்கள் நேசிப்பு முரட்டுத்தனமானது. அதை புரிந்தவர்கள் பாக்யசாலிகள். நான் மிகப் பெரிய பாக்யசாலி. எனக்குத் தெரியும். என்னை விடவீரமாதேவி மிகப் பெரிய பாக்யசாலி. அவருக்கும் புரியும். எனவே இப்போது வாருங்கள்."

"என்ன பாக்யசாலி என்கிறாய். இது மிகப்பெரிய தொந்தரவை ஏற்படுத்தாதா."




"ஒரு தொந்தரவும் ஏற்படுத்தாது. மூன்று மாதத்தில் முற்றிலும் குணமாகி விடுவார்கள். இப்பொழுது தேவை முரட்டுத் தனமல்ல. கோபமல்ல. ஆறுதலான வார்த்தை."

"அதற்கும்தான் விட மாட்டேன் என்று சொல்கிறீர்களே."

"இப்போது அந்த வார்த்தையும் சொல்ல முடியாது. அவர்கள் மொத்தமும் சுத்தப்படுத்தப்பட்ட பிறகு, அவர்கள் ஒரு முறை தூங்கி எழுந்த பிறகு, அவர்கள் தெளிவான பிறகு நீங்கள் அருகே உட்கார்ந்து தலையை தடவி ஏன் இப்படி செய்தாய் கண்ணே. என்று சொன்னால் போதும். உங்களை கட்டிக் கொண்டு அழத் துவங்கிவிடுவாள்.

என்ன சொல்ல வேண்டும். எப்படி சொல்ல வேண்டும். நான் சொல்லித்

தருகிறேன்."

"சகிக்க முடியாத படி திமிர். எனக்கு நீ சொல்லித் தருகிறாயா?"

"ஆமாம், எல்லா இடங்களிலும் உங்கள் முடிவே இறுதி முடிவாக இருக்க வேண்டும் என்று நினைக்காதீர்கள். சில இடங்களில் உங்களுக்கு எதுவும் தெரியாது. சில விஷயங்களை உங்களால் புரிந்து கொள்ள முடியாது."

"இதை ஏன் என்னிடம் சொல்லவில்லை."

"சொல்ல வேண்டும் என்று வந்திருப்பார்கள். சொல்வதற்கு முன்பு பிரச்னைகள் பெரிதாக வந்திருக்கும் சொல்வதை பின்னால் சொல்லிக் கொள்ளலாம். பிரச்சனையை தீர்த்து விடலாம் என்று துணிந்திருப்பார்கள்."

"இந்த நேரத்தில் குதிரைப் பயணம் கூடாது என்பது அவளுக்கு தெரியாதா."

"குதிரைப் பயணம், யானைப் பயணம். பல்லக்கு பயணம் என்று பலதூரம். பலவிதமான பயணம் மேற்கொண்டு ஒழுங்காக திரும்பி வந்து குழந்தை பெற்றவர்கள் பலர் உண்டு. அப்படி அவர்களும் நினைத்திருக்கலாம். இது விதி. தலை எழுத்து. அவர்களுக்கு தங்கவில்லை. நகர்ந்துவிட்டது."

"உன் பதில் எனக்கு சமாதானம் ஆகவில்லை."

"நான் சமாதானப்படுத்த சொல்லவில்லை. நான் சொன்னது மிக அழகான வார்த்தை. இது விதி. தலை எழுத்து. மௌனமாக ஏற்றுக்கொள்ளுங்கள். பிரியமாக நடந்து கொள்ளுங்கள். கர்ப்பம் கலைய வேண்டுமென்றா ஆசைப்பட்டிருப்பார்கள். யோசித்துப் பாருங்கள். தன் கர்ப்பத்தை தானே கலைத்துக் கொண்டிருப்பார்களா, அப்படி இல்லையே.

உங்களுக்கு உதவி செய்வதில் பரபரப்பாக இருந்தார்கள். உங்கள் துயரை துடைப்பதில் முக்கியமாக இருந்தார்கள். உங்களுக்கு வரும் பிரச்சனைகளை தான் முன் நின்று தீர்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். அதில் இந்த கோளாறு வந்துவிட்டது.

அதீத அன்பு இதுதான் அவர்களிடம் இருக்கிறது. உங்களிடமும் அதுதான்

இருக்கிறது. இந்த அதீதமான அன்பு கோபமாக வெளியே வருகிறது. நீங்கள் கொஞ்சுவதும் வேகம். கோவப்படுவதும் வேகம். வீரமாதேவியை நீங்கள் மிகவும் நேசிக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். அதனால்தான் கோபப்படுகிறீர்கள்.

இன்று முழுவதும் நீங்கள் அமைதியாக இருங்கள். நாளை காலை கட்டிக் கொண்டு கொஞ்சலாம். அவர்களும் அதற்கு தயார் ஆகிவிடுவார்கள். இப்பொழுது வேண்டாம்."

"இப்பொழுது என்னதான் செய்வது?"

"ஒரு விஷயம் சொல்வேன். செய்வீர்களா."

"சொல்லுங்கள்."

"ஏதேனும் பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள்."

"பிரார்த்தனை என்றால்."

"தஞ்சை பிரகதீஸ்வரர் கோவிலுக்குள்ளே தடாலடியாக நுழைந்தீர்கள் அல்லவா. கருவறையை சுற்றி வந்தீர்கள் அல்லவா."

"ஆமாம்."

"அது தவறோ என்று தோன்றுகிறது."

"நான் அரசன். அரசன் புக முடியாத இடம் உண்டா."

"ஒரு கருவறைக்குள் நுழைவதற்கு அரசனுக்கும் உரிமை இல்லை என்றுதான் ஆகம விதிகள் சொல்கின்றன. நீங்கள் நுழைந்தது தவறோ என்று தோன்றுகிறது. அதன் விளைவோ இது என்று தோன்றுகிறது."

இராஜேந்திரர் திடுக்கிட்டு பரவை நாச்சியாரைப் பார்த்தார்.

"நான் சொல்வதற்கு கோபித்துக் கொள்ளாதீர்கள். அப்படி எல்லாம் இல்லை என்று முரட்டுத்தனமாக என்னிடம் விவாதம் செய்யாதீர்கள்."

"என்னோடு வந்தியத்தேவரும், அருண்மொழிப் பட்டனும் வந்தார்களே. அவர்களுக்கு ஒன்றும் நேரவில்லையே."

"நேர வேண்டும் என்பது நம்முடைய பிரார்த்தனை அல்ல. அவர்கள் அவர்களாக நுழையவில்லை. நீங்கள் உத்தரவிட்டீர்கள். நுழைந்தார்கள். இதற்குக் காரணம் நீங்களே. உங்களுக்கு அந்த உரிமை இல்லை. நீங்கள் உரிமை மீறியதால் உங்களுக்கு ஒரு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்பது என்னுடைய எண்ணம். நீங்கள் ஏற்றாலும் சரி. ஏற்காது போனாலும் சரி, இந்த நிந்தனைக்கு பதிலாக ஏதேனும் பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள்."

"என்ன பிரார்த்தனை?"

"அதை நீங்களே முடிவு செய்யுங்களேன். எல்லாவற்றிற்கும் நான் ஏன் பதில் சொல்ல வேண்டும்."

"பரவை. மிகுந்த சாமர்த்தியத்தோடு பேசுகிறாய். நான் பலகீனமாக இருக்கும்போது காட்டுத்தனமாக தாக்குகிறாய்."

"ஒருபோதும் இல்லை. நீங்கள் இன்னும் விவேகமாக இருக்க வேண்டும் என்பதற்காக, இந்த இடத்தில் அதிகம் பேசக்கூடாது என்பதற்காக. எங்களுக்கு கட்டுப்பட வேண்டும் என்பதற்காக நான் சில விஷயங்களை சொல்கிறேன். ஆணுக்கு எல்லாம் புரியாது. பெண்ணின் அத்தனை வேதனையும் புரியாது. பெண்ணை முற்றிலும் புரிந்து கொண்ட ஆண் மிக மிக குறைவு."

"ஆணினுடைய பாதுகாப்பில் தான் பெண் உயிர் வாழ்கிறாள்."

"அப்படி ஒரு கற்பனை உண்டு. யாருடைய பாதுகாப்பிலும் யாரும் உயிர் வாழவில்லை. கடவுளுடைய பாதுகாப்பில் தான் அத்தனை பேரும் உயிர் வாழ்கிறோம்.

ஆணுடைய வலிவு பெண்ணை அடங்கி இருக்க தூண்டுகிறது. ஆணினுடைய அடக்குமுறை பெண்களை பின்னடையச் செய்கிறது. இப்பொழுது உங்களுடைய மனைவி வீரமாதேவி யாருக்கு பிரச்சனை. அந்த பிரச்சனை தீர இறைவனிடம் வேண்டிக் கொள்ளுங்கள். மாமன்னர் இராஜேந்திரர் மிகுந்த வலுவுடையவர்தான். ஆனால் உலகத்தை மாற்றிவிடக் கூடியவர் அல்ல. வந்த விதியை திருப்பிவிடக் கூடியவர் அல்ல. அவருக்கும் எல்லை உண்டு. அவருக்கும் சில இடங்களில் திகைத்துப் போய் நிற்பது உண்டு.

இப்போது நீங்கள் திகைத்து நிற்கிறீர்கள். என்ன செய்வது என்று தெரியாமல் நிற்கிறீர்கள். இறைவனிடம் சரணடையுங்கள். இறைவனை நோக்கி பிரார்த்தனை செய்ய வேண்டிய நேரத்தில் வெறும் கோபத்தை, கூச்சலை வெளிக்காட்டாதீர்கள்."

'புரிகிறது பரவை." நீண்ட பெருமூச்சோடு இராஜேந்திரர் பதில் சொல்ல, பரவை அவரை தனியாக உட்கார வைத்தாள்.

அரண்மனை வைத்தியர் வந்து கும்பிட்டு நிற்க இராஜேந்திர சோழர் எழுந்து கேட்டபோது,

"நான் பார்த்துக் கொள்கிறேன். சிறிதளவும் கவலைப்படா தீர்கள்" என்று சொல்லிவிட்டு, வீரமாதேவியின் அறையை நோக்கி விரைந்தார்.

குந்தவை தேவியார் காவல் தாண்டி வீட்டிற்குள் நுழைவது தெரிந்தது.

"என்ன இராஜேந்திரா, வீரமாதேவிக்கு சிக்கலாமே" என்று சொல்ல,

அவர் மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

"நான் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று அவருடைய உத்தரவுக்குக் காத்திராமல் குந்தவை தேவியார் வேகமாக வீரமாதேவியின் அறைக்குள் நுழைந்தார்.

இராஜேந்திரர் மறுபடியும் தனியாக விடப்பட்டார். அவருக்கு எதிரே பழங்கள் வைக்கப்பட்டன. சூடான உணவும் கதம்பக் கூட்டும் வைக்கப்பட்டன. அதைப் பிரட்டி எடுத்து அவருக்கு பரவை ஊட்ட முயன்றபோது வேண்டாம் என்று தடுத்தார். தானே பிசைந்து வேகமாகச் சாப்பிட்டார். நீர் குடித்தார். தட்டில் கை கழுவிக் கொண்டார். துணியால் உடம்பு துடைத்துக் கொண்டார். மறுபடியும் கிழக்கு நோக்கி அமைதியாக உட்கார்ந்து கொண்டார்.

சட்டென்று உள்ளுக்குள்ளே ஒரு பாடல் தோன்றியது.

உள்ளே எண்ணங்கள் ஏதும் இல்லாதபோது சட்டென்று ஏதோ ஒரு இடம் தெளிவாகி மலர்ந்தது. அந்த மலர்ந்த இடத்திலிருந்து சில வரிகள் ஞாபகம் வந்தன. அந்த வரிகள் உள்ளுக்குள் பாட்டாகப் பொங்கின.

"மறையுடையாய் தோலுடையாய் வார்சடை மேல் வளரும்

*பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்று உனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றம் ஓராய் கொள்கையினால் உயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.*

*நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத
உன்னடியார் உயிரைவவ்வேல் என்றவர் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கும்
நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே."*

அவர் பாட முக்கோன கிழானடி, பஞ்சவன் மாதேவியும், பரவை நாச்சியாரும் தொலைவிலிருந்து அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். மெல்ல அவர் கண்களில் நீர் திரண்டது.

பிரகதீஸ்வரா, அத்து மீறி உன் சன்னதியில் நுழைந்தது தவறு. நானும், என் மனைவியும் பரவை நாச்சியாரும் வீரமா தேவியின் நலன் பொருட்டு தோளில் நீர் சுமந்து கைகளில் பூ ஏந்தி உன்னை நோக்கி வருகிறோம். கோவில் வாசலிலிருந்து நான், என் மனைவி நீர் சுமந்து வருகிறோம். என் அன்புக்கினிய மனைவி வீரமாதேவியின் உடல்நலத்திற்கு எந்த கேடும் வராமல் காப்பாயாக. மறுபடியும் அவள் என்னோடு பயணம் செய்யும்படி உற்சாகமாக மாற்றுவாயாக என்று வேண்டினார்.

கண் திறந்தார். சரக்கென்று கண்களிலிருந்து நீர் வடிந்தது. அவர்கள் அருகே ஓடிவந்தார்கள். சுற்றி நின்றார்கள். நெஞ்சு தடவினார்கள். அணைத்துக் கொண்டார்கள். முகத்தை தங்கள் மார்பில் பதித்துக் கொண்டார்கள். முத்தமழை பொழிந்தார்கள்.

ஆனால் ஸ்ரீ இராஜேந்திரர் ஒரு துறவியைப் போல அங்கு அமர்ந்திருந்தார். அவர் நினைவு முழுவதும் வீரமாதேவியிடம் இருந்தது.

"மிக அற்புதமான பாட்டு, மிக அற்புதமான பாட்டு, இந்த பாட்டுக்கு நான் நடனமாடி இருக்கிறேன். 'பூவொடு நீர் சுமக்கும்' என்ன அற்புதமான வரிகள். 'பொன்னடியே பரவி நாளும் நீர் சுமக்கும் நின்னடியார் இடர்களையாய்'. வீரமாதேவியார் நீரும், பூவும் சுமந்தாரா தெரியவில்லை. ஆனால் அவருக்காக நாம் சுமப்போம். நாம் நான்கு பேரும் பூவும், நீரும் எடுத்துக்கொண்டு பிர கதீஸ்வரர் கோவிலுக்கு போய் அவருக்கு அபிஷேகம் செய்வோம்."

"எந்த நீர்?"

"காவிரிதான். அரசலாறோ, குடமுருட்டியோ. அந்த இடத்திலிருந்து கூட

நீர் எடுத்து வரலாம். அதுவும் காவிரிதானே. நமக்கு நீர் என்றால் காவிரி நீர் தானே இருக்கிறது" என்று முக்கோக்கிழானடி கேட்டார்.

"ஏன்? ஒரு முறை கங்கை ஜலமும் கூட நம் பிரகதீஸ் வரருக்கு அபிஷேகம் செய்யலாம்.

உள்ளே போய் சுற்றி வந்து அட்டகாசமாய் பேசி சிரித்து வந்தது தவறுதான்.

வீரமாதேவியாரை வைத்து சொல்லவில்லை. நான் என்னுடைய சுயநலத்திற்காக அங்கு அடி எடுத்து வைத்து விட்டேன். அதை நான் கங்கையின் நீர் ஊற்றி மெல்ல அந்த சம்பவத்தை துடைப்பேன்.

கங்கை வரைப் போய் நீர் கொண்டு வருவேன், பிரகதீஸ்வரா, உடன் இரு, உதவி செய்." கை கூப்பினார். அவர்களும் கை கூப்பினார்கள்.

அந்த மூன்று பெண்மணிகளுக்கும் அவர்களுடைய கணவரை மிகவும் பிடித்திருந்தது. மெல்ல நகர்ந்து வீரமாதேவியாரிடம் போய் உலுக்கி எழுப்பி, அடியேய் உன் புருஷன் உனக்காக என்ன வேண்டியிருக்கிறான் தெரியுமா. என்று சொன்னால் போதும். முகம் முழுவதும் குப்பென்று வியர்க்கும். கண்களில் நீர் பொங்கும். கண்ணீர் வழியும்.

புருஷன் இங்கே மனைவியை நினைத்துக் கொண்டு அழுகிறான். அங்கே மனைவி புருஷனை நினைத்துக் கொண்டு அழுவாள். பார்ப்பதற்கே சந்தோஷமாக இருக்கும் என்று மூவரும் பரபரத்தார்கள்.

வேங்கி தேசத்து அரண்மனையில் விமலாதித்தன் தூக்கம் வராமல் தவித்தான். மகனும், மனைவியும் தப்பித்துப் போய்விட்டார்கள் என்பது நிம்மதியாக இருந்தாலும் மிகப் பெரிய இழிவாக பேசப்பட்டது.

"இராஜேந்திரனே வந்தாரா, வந்திருக்க மாட்டார். யாராவது ஆளைதான் அனுப்பி இருப்பார்."

"தேர் ஏறி வந்தானா, குதிரை ஏறி வந்தானா."

"எப்படி வந்தால் என்ன. இரவு படுக்கும்பொழுது பதினைந்து ஆண்களுக்கு நடுவேதானே படுக்க வேண்டும். மரத்தடி இருட்டில் இராஜேந்திரருடைய தங்கை குந்தவை தேவியார் சுற்றி பதினைந்து

வீரர்களுக்கு நடுவே படுத்துக் கொண்டிருப்பது கண்கொள்ளா காட்சிதான்" என்று சொல்ல,

விமலாதித்தன் அதட்டி மிரட்டினான்.

"ஒரு பெண்ணின் கற்பை பற்றி சொல்லாதே. அவள் குரங்கு தான். ஆனால் அசிங்கம் பிடித்தவள் அல்ல. அசிங்கம் பிடித்த பெண்களெல்லாம் எங்கிருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். என்னை பேசவைத்து விடாதீர்கள்" என்று சீறலாகச் சொன்னார்.

சபை மௌனமாகியது.

ஆனால் நமட்டுச் சிரிப்பும், குசுகுசு பேச்சும் குறைய வில்லை. அவை விமலாதித்தன் நெஞ்சை குடைந்தன.

எவ்வளவு மோசமான நேரம் இது. எத்தனை கடினமான நேரம் இது. எவ்வளவு சாதுரியமாக நடந்து கொள்ள வேண்டும். இப்படி சட்டியை உடைத்தது போல் எடுத்தேன் கவிழ்த்தேன் என்று செய்கிற பெண்ணை வைத்துக் கொண்டு சொச்ச காலம் எப்படி வாழ்வது, ஒதுங்கி விடலாமா, வேண்டாம் என்று ஒதுங்கி விடலாமா.

ஆனால் இராஜநரேந்திரன் விவேகமுள்ளவன். தெளிவுடையவன். சிவ பக்தன். இராஜேந்திர சோழருடைய சாயல் அவனிடம் அதிகம் உண்டு.

விமலாதித்தன் எனக்கு அப்பா. இராஜேந்திர சோழர் எனக்கு தெய்வம் என்று பலமுறை அவன் கைகூப்பியிருக் கிறான். அவனுக்காக இந்த அசிங்கங்களை பொறுத்துக் கொண்டுதான் ஆக வேண்டும்..

இந்தப் பக்கம் இருக்கின்ற விஷ்ணுவர்த்தன் மகாமட்ட மானவன். அந்தப்புரம் முழுவதும் துணியில்லாது சுற்றி வருகிறானாம். சேடி பெண்கள் மட்டுமல்லாது யாரைப் பார்த்தாலும் இறுக்கம் தழுவிக் கொள்கிறானாம். 'இப்படியே போனால் நோய் பிடித்துவிடும்' என்று வைத்தியர்கள் எச்சரித்தும் அதுபற்றி கேட்காமல் இருக்கின்றானாம்.

இப்பொழுதே கை, கால் நடுங்குகின்றன. கத்தி பிடித்து எதையும் தாக்கத் தெரியவில்லை. மணல் மூட்டையை கயிற்றில் கட்டி வேகமாக விட்டால் தடுத்து நிறுத்தத் தெரியாது கைகளால் திசை மாற்றாது, திரும்பி நின்று பின் மண்டையில் அடிவாங்குகிறான்.

"இவ்வளவு வேகமாக விடுகிறாயே" என்று வீரனை கடிந்து கொள்கிறான்.

மேலை சாளுக்கிய அரசியார் அலங்காரப் பிரியை. எந்நேரமும் தலையை அவிழ்த்துக் கொண்டு தூபம் போடுவதும், உடம்புக்கு எண்ணெய் தடவிக் கொள்வதும், முகத்திற்கு பாலும், முட்டையும் தடவி கொண்டு பொழுதை கழிக்கிறாள். 'நாற்பது வயதிலும் நீ அழகாய் இருப்பாய் என்று நினைக்கிறாயா' என்று கேட்டால்

"நிச்சயம் இருப்பேன்" என்று சவால் விடுகிறாள். அதனால்தான் புருஷனுக்கு அருகே வருவதே இல்லையாம். அழகுதான் முக்கியமாம்.

மனைவி அமைவதற்கு ஒரு மனிதன் தனியாக வரம் வாங்கி வரவேண்டும். இராஜராஜர் வாங்கி வந்திருக்கிறார். வானவன் மாதேவி அற்புதமான மனைவி. பஞ்சவன் மாதேவி கொடிகட்டி பறந்தார். இராஜராஜன் கொடியும் அவளால் பறந்தது.

ஏன் இராஜேந்திர சோழனுக்கு என்ன குறை. அவனுக்கு வீரமாதேவி ஒருத்தி போதுமே. எவ்வளவு எளிதாக உள்ளே நுழைந்து குந்தவையை தூக்கி வந்துவிட்டாள். அழகுக்கு பரவை. வீரத்துக்கு வீரமாதேவி. கெட்டிக்காரத்தனத்துக்கு முக்கோக்கிழானடிகள். தாயைப் போல அன்பு செலுத்துவதற்கு பஞ்சவன் மாதேவி. இராஜேந்திர சோழன் கொடுத்து வைத்தவன்.

இதையெல்லாம் விட வியந்து போகிற ஒரு சிறப்பு வந்தியத் தேவர்தான். இராஜகம்பீரம் மிக்க குந்தவை பிராட்டி என்ற அந்த பெண் மணிக்கு புருஷனாக வர அவர் என்ன தவம் செய்திருக்க வேண்டும். அந்த அம்மையாருக்கு புருஷன் மேல் கொள்ளை பிரியம். வந்தியத் தேவருக்கோ குந்தவை பிராட்டி என்றால் பெரும் மதிப்பு. அரச சபையில் அவர்கள் இரண்டு பேரும் நடந்து வரும்பொழுதே 'ஆஹா ஆஹா' என்று சபை ஆரவாரிக்கும். எங்கு போனாலும் தனியாகத் தெரிகிறார்கள்.

நான் இரண்டு பக்கமும் இரண்டு எருமைகளிடம் மாட்டிக் கொண்டு அல்லாடுகிறேன்."

"வரம் மட்டுமல்ல சாபமே வாங்கி வந்திருப்பீர் போலிருக்கிறது."

இந்நேரம் இராஜேந்திர சோழனிடம் போய் குந்தவை சேர்ந்திருப்பாள்.

என்ன சொன்னாளோ, ஏது சொன்னாளோ, என்னைப் பற்றி என்ன குறையெல்லாம் சொன்னாளோ, நல்லது சொன்னாளோ, கெட்டது சொன்னாளோ அதனால் இராஜேந்திர சோழருக்கு ஒரு இரகசிய ஓலை அனுப்பிவிட வேண்டும்.

சிறு விளக்கில் அவர் ஓலை எழுத ஆரம்பித்தார்.

எனக்கு உன்னை எதிர்க்கின்ற திறனோ, திடமோ அறவே இல்லை. எதிர்க்க வேண்டும் என்ற எண்ணமும் இல்லை. உன் தங்கையோடு நான் குடித்தனம் செய்வது பேரவஸ்தை. அவளுடைய நடவடிக்கைகள் முற்றிலும் தவறானவை. பல்வேறு இடத்திலிருந்து செய்தி சேகரிக்க தெரிந்த உனக்கு அவள் எப்படி நடந்து கொள்கிறாள் என்பதை அறிந்து கொள்ள நேரமாகாது. ஆனால் இராஜநரேந்திரன் உத்தமமான பையன். சீரான குணம். உன்னைப் போன்ற சாயல். உன்மீது தேவதா விசுவாசம். அவனுக்கு என்னை பிடிக்கும். ஆனால் நீதான் அவன் கும்பிடுகின்ற தெய்வம். எனக்காக இல்லாது போனாலும் அவனுக்காக வேங்கியை நோக்கி வா. நான் மறுபடியும் சொல்கிறேன். உனக்கு நான் எதிரியல்ல.

நீ வேங்கியை அழிக்க வேண்டியது அவசியம். ஒட்டர்களையும், மேலைச் சாளுக்கியரையும் அடித்து துரத்த வேண்டியது அவசியம். வேங்கியின் மக்கள் நல்லவர்கள். அவர்களுக்கு தீங்கு செய்துவிட வேண்டாம். உன் வருகையை ஆவலோடு எதிர்பார்க்கிறேன்.

விமலாதித்தன் என்று கையெழுத்திட்டார். யோசனை செய்தார். வேறு ஒன்று எழுதினார். சுருட்டினார். ஒரு நம்பிக்கையான காவல் வீரனை அழைத்தார்.

"இதைக் கொண்டு போய் இன்னாரிடம் கொடு" என்று காதோரம் சொன்னார். நிறைய காசு கொடுத்தார். அவன் வாங்கிக் கொண்டான்.

"எனக்கு குந்தவை தேவியார் ஓய்வு கொடுத்து விட்டார்கள். நான் சோழ தேசம் நோக்கி போகிறேன்" என்று பாடி காவலில் சொன்னான். பாடிகாவலில் அவனை ஓரமாக உட்கார வைத்தார்கள். வேகமாக சோதனை இடப்பட்டான். அவன் இடுப்பிலிருந்து ஓலை உருவப்பட்டது. ஓலையை அவர்கள் விளக்கொளியில் படித்தார்கள். உள்ளுக்குள்ளே போய் அதிகாரிகளிடம் பேசினார்கள். வேகமாக வெளியே வந்தார்கள்.

"இந்தா. உன் ஓலையில் ஒரு செய்தியும் இல்லை, நலம். நலம் அறிய அவா

என்றுதான் எழுதப்பட்டிருக்கிறது. கொண்டு போய் இராஜேந்திரனிடம் கொடு" என்று சொல்லி அவனிடம் வீசினார்கள்.

அவன் வாங்கி வணக்கம் செய்து விடைபெற்றான்.

மூன்றரை நாட்களில் தஞ்சையை அடைந்தான். மாமன்னர் இராஜேந்திரனை வணங்கினான். ஓலையை நீட்டினான். ஓலை படிக்கப்பட்டது.

இராஜேந்திரா, உன்னால் ஒன்றும் செய்ய முடியாது. நான் தான் இந்த இடத்தின் மன்னன். நான் தீர்மானிப்பது தான் இங்கு தீர்ப்பு. உன்னுடைய மருமகனான இராஜநரேந்திரனுக்கு பட்டம் அளிக்க முடியாது. அதற்கு காரணம் உன் தங்கை. அவள் குரங்கு புத்தி. என்னுடைய இன்னொரு மகன் விஷ்ணுவர்தனன் விஜயாதித் தனுக்கு நான் இளவரசு பட்டம் கட்டிவிட்டேன். அவனையே நான் மன்னனாகத் தேர்ந்தெடுப்பேன். நீ படை எடுத்து வரக்கூடும். நான் தயாராக இருக்கிறேன். அவசியமெனில் நாம் யுத்த களத்தில் சந்திப்போம். உண்மையாகவே உனக்கு புத்தி இருந்தது எனில் நீ விலகி நில். இதற்குள் தலையிடாதே.

விமலாதித்த மாமன்னன் என்று எழுதி இருந்தது.

மன்னர் அருண்மொழியிடம் ஓலையைக் கொடுத்தார். அருண்மொழி படித்துவிட்டு வந்தியத் தேவரிடம் நீட்டினான். வந்தியத்தேவர் அரையன் இராஜராஜனிடம் நீட்டினார். அரையன் இராஜராஜன் படித்து விட்டு ஓலையை அலட்சிய மாக ஒரு வீரனின் கையில் போட்டார்.

"இது விமலாதித்தர் எழுதிய ஓலை அல்ல. அவருடைய கையெழுத்து அல்ல. அவர் அவருக்கென்று சில வார்த்தை பிரயோகங்களை வைத்திருக்கிறார். அது இங்கு இல்லை. மேலும் கீழே கொடுக்கப்பட்ட அந்த குறிகளெல்லாம் தவறாக இருக்கின்றன."

"ஆமாம். இது விமலாதித்தர் ஓலை அல்ல. என்ன ஆயிற்று நண்பரே." இராஜேந்திரர் வினவினார்.

"என்னை பாடி காவலில் மடக்கி ஓலையை பிடுங்கி கொண்டார்கள். உள்ளே போய் அதிகாரிகளிடம் பேசினார்கள். வெளியில் வந்து இந்த ஓலையில் ஒன்றும் இல்லை. கொண்டு போய் இராஜேந்திரனிடம் கொடு. வெறும் நலம் நலமறிய அவா என்றுதான் இருக்கிறது என்று தூக்கிப்

போட்டார்கள். வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்."

"இந்த ஓலை அவருடைய ஓலை அல்லவே."

"எனக்கும் அந்த சந்தேகம் இருந்தது. இருப்பினும் எது கொடுக்கப்பட்டதோ அதை உங்களிடம் கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். எனக்கு ஒரு ஓலை அல்ல. இரண்டு ஓலை கொடுத்தார். இது விமலாதித்தர் கொடுத்த ஓலையின் இன்னொரு பிரதி" என்று சொல்லி வேட்டி நுனியை தடவி ஒரு நூல் பிரித்து ஒரு ஓலையை உருவி, வந்தியத் தேவரிடம் நீட்டினான்.

வந்தியத் தேவர் மன்னரிடம் நீட்ட, மன்னர் தடவி படித்தார்.

"அடேய், இது விமலாதித்தன். இதுதான் விமலாதித்தன். இந்த சொற் பிரயோகங்கள் அவருடையது. இந்த கையெழுத்து அவருடையது.

எனவே நம்முடைய வேலை எளிதாயிற்று. எப்பொழுது படை எடுக்கலாம் என்பது பற்றி உங்களுக்குள் பேசி முடிவு செய்யுங்கள். நான் போய் காவிரிக் கரையில் குளித்துவிட்டு பிரகதீஸ்வரர் கோவிலுக்கு போகப் போகிறேன். முடிந்தால் நீயும், வந்தியத்தேவரும் கலந்து கொள்ளுங்கள்."

"என்ன?"

"பூவொடு நீர் சுமக்கும்" என்று ஒரு வரி ஓடிற்று. கருவறைக்குள் நுழைந்தோம் அல்லவா. நமக்கு ஒரு தீங்கும் வரக்கூடாது. காவிரியிலிருந்து நீர் சுமந்து, பூக்கள் சுமந்து பிரகதீஸ்வரருக்கு சமர்ப்பிக்கலாம் என்று ஒரு எண்ணம் ஏற்பட்டது."

"புரிகிறது மன்னா. ஏன் சொல்கிறீர்கள் என்று புரிகிறது. நாங்களும் வருகிறோம்."

செய்தி பரவிற்று.

ஒன்று, இரண்டு, மூன்று என்று பல்வேறு இடங்களுக்கு போயிற்று. பொதுமக்களுக்கும் எட்டியது.

"வீரமாதேவியார் உடல்நலம் சரியில்லாமல் இருக்கிறார். குந்தவையை மீட்டு வரும்போது காயம் பட்டுவிட்டது. அதனால் படுத்த படுக்கையாக இருக்கிறது. அவருக்கு நேர்ந்து கொள்வதற்காக மாமன்னர் காவிரி நீர்

"தலைமை வைத்தியரே, ஒரு வண்டி போதாது. இரண்டு வண்டிகள் வேண்டும். இரண்டு வண்டிகளும் இரண்டு திக்கில் பிரியப் போகிறது. ஒன்று அரையன் இராஜராஜனை பின்தொடரும். இன் னொன்று சக்கரவர்த்தி இராஜேந்திர சோழரை பின்தொடரும். இப்பொழுது இருப்பது போல இன்னொரு மடங்கு மருந்துகள் வேண்டும். வழியில் எங்கே மருந்துகள் சம்பாதித்துக் கொள்ளலாம்" என்று கேட்க,

அவர்கள் பல இடங்களைச் சொன்னார்கள்.

வெட்டு காயத்திற்கு உண்டான மருந்துகளை அதிகம் எடுத்துக் கொள்ள மிலானுடையார் கட்டளை இட்டார். ஒவ்வொரு மருந்தையும் இராஜராஜ பிரம்மராயன் சோதித்தான். எல்லாம் மிகத் தரமாக இருந்தன.

"தனியாக ஒரு அனுமதி நீங்கள் தர வேண்டும்." தலைமை வைத்தியர் கேட்டார்.

"என்ன?"

"உங்கள் பிள்ளையை நான் காடுகளுக்கு அழைத்துப் போகப் போகிறேன்."

"எதற்கு?"

"அங்கிருந்துதான் மூலிகைகள் கொண்டுவர முடியும். உலர்ந்த காய்களை, விதைகளை, மரப்பட்டைகளை நாம் அங்கிருந்துதான் எடுத்து வர வேண்டும். அப்படி அங்குபோய் அவைகளை இனம் காணுவதற்கு இவர் தெரிந்துகொள்ள வேண்டும். எனவே காடுகளுக்கு ஊடே போய் வேடர்களோடு கலந்து பேசி, அங்கிருந்து நமக்கென்று மருந்துகள் வாங்கி வர வேண்டும். யுத்தத்திற்கு போகும் வழியில் பல இடங்களில் நாங்கள் பிரிந்து காடுகளுக்கு போய் அங்குள்ள வேடர்களை சந்தித்து இன்னின்ன விஷயங்கள் வேண்டுமென்று கேட்கப் போகிறோம். அப்படி கேட்கும்பொழுது அவர்கள் பதிலுக்கு ஏதேனும் வேண்டும் என்று கேட்பார்கள். பொன் கழஞ்சுகளை அவர்கள் வாங்குவதில்லை.

சோளமோ, கம்போ, கேழ்வரகோ, அரிசியோ அவர்களுக்கு மிகப்பிடித்தமான விஷயம். அரிசியை மிகவும் விரும்புவார்கள். ஒரு

கலம் அரிசிக்கு உயிரையே கொடுப்பார்கள். ஒரு கலம் அரிசிக்கு ஒரு ஜாடி நிறைய தேன்வாங்கிவிடலாம்.

எனவே, அவர்களுக்கென்று கொடுப்பதற்கென்று தனியாக அரிசி வேண்டும். இதற்கு தலைமையாக உங்கள் பிள்ளையை அனுப்பப் போகிறேன்" என்று சொல்ல,

இராஜராஜ பிரம்மராயன் தன் பிள்ளையை அருகே அழைத்து தழுவிக் கொண்டான். நெற்றியில் முத்தமிட்டான்.

"எந்த வேலை செய்தாலும் சோழ தேசத்திற்காக செய்கிறாய் என்பது மிகப் பெரிய பெருமையாக இருக்கிறது. என் வாழ்க்கை வீணாகப் போயிற்றோ, சரியான பரம்பரையை நான் உருவாக்கவில்லையோ என்று வருத்தப்பட்டேன். இப்போது இல்லை.

இந்த முப்பத்தைந்து வயதில் எனக்கு நீ துணையாக இருக்கிறாய் என்பது சந்தோஷமாக இருக்கிறது. நீயும் அரச சேவையில் இருக்கிறாய் என்பது ஆனந்தமாக இருக்கிறது. சமயம் நேரும் போது இராஜேந்திரருக்கு நான் அறிமுகப்படுத்துவேன்" என்று சொல்ல அவன் சரி என்று தலை அசைத்தான்.

பேசாதவனாகவே அவன் இருந்தான்.

வண்டி நிறைய விதம் விதமான மருந்துகள் ஏறின. எங்கெல்லாம் மருத்துவர்கள் இருப்பார்கள் என்பதையும் மிலாடுடை யாரை கேட்டு ஞானசம்பந்தன் தெரிந்து கொண்டான்.

யுத்தம் என்பது வெறும் வாளும், வேலும் மட்டுமல்ல. அது அரிசியும், பருப்பும் நிறைந்தது. அது வலியை நீக்குகின்ற எண்ணெயும், காயத்திற்கு போடுகின்ற மருந்தும் கொண்டது. கல் தச்சர்களையும், கம்மாளர்களையும் கொண்டது.

போருக்கு போய் அங்கு கோட்டை கதவுகளை இடித்து உடைத்த பிறகு அதை சரி செய்ய கொத்தனார்களையும் கொண்டது.

புரவிக்கு முதுகு தேய்த்துவிட்டு புல் புடுங்கி போடுகின்ற பஞ்சமர்களை கொண்டது. யானை மீது ஏறி நின்று எக்காளம் ஊதுவார், முரசு அறிவிப்பார் என்று பல்வேறு வேலை ஆட்களைக்

கொண்டது.

இந்த முறை ஞாபகமாக பொற்கொல்லரையும் கூட்டிக் கொள்ள வேண்டும் என்று இராஜராஜ பிரம்மராயன் நினைத்துக் கொண்டான். மிலாடுடையாரின் காதில் சொன்னான்.

"ஆமாம். போன தடவை தவித்துப் போனோம். வெண்கலத்தை தங்கம் என்று நினைத்து எடுத்து வந்தோம். இந்த முறை நிச்சயம் நாம் சரியாக அதை செயல்படுத்த வேண்டும்" என்று சொல்லி தேர் ஏறினார்கள்.

அவர்கள் பொற்கொல்லர் இருக்கும் இடம் நோக்கிப் போனார்கள். கூடைகூடையாய் மருந்துகள் மாட்டு வண்டியில் ஏற்றப்பட்டன. ஞானசம்பந்தன் தலைமை வைத்தியரை விழுந்து வணங்கினான்.

"நான் தொலைதூரம் போகப் போகிறேன். உங்கள் ஆசீர் வாதம் வேண்டும். இன்னும் அதிகம் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசீர்வாதம் செய்யுங்கள். இன்னும் புதிய மருந்துகள் கொண்டு வர வேண்டும் என்று செய்யுங்கள்.

அரசர் கங்கை நீர் கொண்டு வருவதற்காக போகிறாராம். அப்படி ஒரு எண்ணம் அவருக்கு இருக்கிறதாம். எனக்கு புதிய மருந்துகள் கொண்டு வர வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. நல்ல மருந்துகளோடு சோழ தேசம் வருவேன்" என்று அவன் உற்சாகமாகச் சொன்னான்.

அவனை எல்லா வைத்தியர்களும் தலைதொட்டு ஆசீர்வதித்தார்கள். ஜாதி மாறாமல் திருமணம் செய்து கொள்வது ஒரு விஷயம். ஜாதி மாறி திருமணம் செய்து கொள்வது ஒரு விஷயம். வெவ்வேறு ஜாதியினரிடையே கலப்பாக பிறந்த பிள்ளை மிகச் செழிப்பாகவும், சிறப்பாகவும், திடமாகவும் இருக்கிறது என்று நம்பினார்கள்.

கலப்பின பிள்ளைகளுக்கு மரியாதை இருந்தது.

ஞானசம் பந்தன் கலப்பின பிள்ளை. சீராகவும், செழிப்பாகவும், திடமாகவும் வளர்ந்த பிள்ளை. அவன் வைத்தியத்தின் புதிய முறைகளை கற்று வருவான். சோழ குலத்தை இன்னும் சுகமாக இருக்க

வைப்பான் என்ற நம்பிக்கை எல்லோருக்கும் இருந்தது.



---

* சாலை: போர்ப் பயிற்சிக் கல்லூரி.
* இரண்டாம் இராஜேந்திரன், இராஜேந்திரருடைய இரண்டாம் மகன், அவரையே இளவல் என்கிறோம்.

# அத்தியாயம்




**த**ஞ்சாவூர் தெற்கு புறம்படியின் பக்கம் பாடி காவல் செய்திருந்த வீரர்களால் அவர்கள் மடக்கப்பட்டார்கள். தஞ்சையைச் சுற்றி மிகப் பெரிய மதில் எழுப்பப்பட்டு ஆழமான அகழி தோண்டப்பட்டு அதை கடப்பதற்கு முன் யாராயினும் தங்களை பற்றி சொல்லிவிட்டுத் தான் போக வேண்டும் என்ற நிரந்தர கட்டளை இருந்தது. சில சமயம் வீரர்கள் கடுமையாக சோதித்த பிறகே மக்களை உள்ளே அனுமதித்தார்கள். தினசரி உள்ளே போய் விட்டு வருகின்ற கிராமத்து மக்களும் இருந்தார்கள்.

குதிரையில் வந்து இறங்கிய நன்கு உடுத்திய இடையில் வாளும், பட்டுத் தலைப்பாகையும், கைகளில் தங்க வளையமும் நெஞ்சில் ஆரமும் கொண்டு பிரபுக்கள் போல் இறங்கிய அவர்களை சோழ வீரர்கள் வரவேற்றார்கள்.

"உள்ளே போக வேண்டுமா" என்று கேட்டார்கள்.

"ஆமாம்" என்று அவர்கள் பதில் சொல்ல,

"நீங்கள் யார். உங்களைப் பற்றி விவரம் என்ன, உங்கள் அடையாளம் என்ன சொல்லுங்கள்" என்று மரியாதையாக விசாரித்தார்கள்.

"என் பெயர் விமலன் அகதீஸ்வரன். ஸ்ரீ விஜயத்து மன்னர் ஸ்ரீமாறன் விஜயோத்துங்கவர்மனின் மகனான சங்கிராம விஜயோத்துங்கவர்மனின் கன்மி. அதாவது தூதரக அதிகாரி. இது என் முத்திரை மோதிரம். இது எனக்கு என் அரசர் கொடுத்த அடையாள ஓலை."

"வணக்கம் ஐயா, உங்களைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறோம். என்ன

விஷயமாக தஞ்சைக்கு வருகிறீர்கள்."

"சோழ தேசத்திற்கும், ஸ்ரீ விஜயத்திற்கும் நல்ல உறவுகள் இருக்கின்றன. அதை மேலும் வலுப்படுத்த நான் அரசரை சந்திக்க விரும்புகின்றேன்."

சட்டென்று வீரர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"நல்ல உறவு இருக்கிறது என்று இன்னும் சொல்லுகிறீர்களா."

"சிற்சில குழப்பங்கள் ஏற்பட்டிருக்கலாம். சில முரடர்கள் முட்டாள்தனமாக செய்திருக்கலாம். அதற்கும் ஸ்ரீ விஜய மன்னருக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இப்பொழுது அந்தப் பகுதி கடற்கொள்ளையரால் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது. அதை தடுக்க தீவிர நடவடிக்கைகள் எங்கள் மன்னர் எடுத்துக் கொண்டிருக்கிறார். கடற்படையை பெருக்கிக் கொண்டிருக்கிறார்.

இடையே சோழ தேசத்து வணிகர்கள் சில சிரமங்களுக்கு உள்ளாயினர் என்று கேள்விப்பட்டு எங்களை இராஜேந்திர சோழர் அழைத்திருக்கிறார். இது அழைப்பு ஓலை." அவர் இராஜேந்திர சோழர் முத்திரையிடப்பட்ட ஓலையை காட்ட, சட்டென்று அவர்கள் நிமிர்ந்தார்கள். அந்த ஓலையை கண்ணில் ஒற்றிக்கொண்டார்கள். தலையில் வைத்துக் கொண்டார்கள்.

"முதலிலேயே சொல்லக்கூடாதா, இராஜேந்திரர் அழைக்கிறார் என்றால் உடனடியாக அனுப்பி இருப்போமே. நீங்கள் யார் ஐயா."

அடுத்தவரை நோக்கி திரும்பினார்கள்.

"நான் கடாரத்து அரசரின் கன்மி. தூதுவ அதிகாரி. என் பெயர் குருத்தன் கேசவன் அக்கரலோகை.

கடாரத்திலும் அரசியல் குழப்பங்கள் இருக்கின்றன. அவை சோழ வணிகர்களுக்கு எதிராகவும் சில விஷயங்களில் ஈடுபட்டுவிட்டன. எனவே அதைப் பற்றி விளக்கம் அளிப்பதற்காகவும் நான் நண்பரோடு சென்று கொண்டிருக்கிறேன். எனக்கு தனியாக அழைப்பு இல்லை. ஆனாலும் எனக்கு அழைப்பு விடுவதற்கு முன்பு நானாகவே இராஜேந்திரரை பார்த்துவிடலாம் என்று நினைத்து வந்திருக்கிறேன். நீங்கள் அனுமதித்தால் உள்ளே போகிறேன்."

"அனுமதிக்க மறுப்போம் என்று நாங்கள் சொல்லவே இல்லையே. ஏன் தேவை இல்லாத ஒரு வார்த்தையை பேசுகிறீர்கள்."

குருத்தன் கேசவன் அக்கரலோகை இந்த பெயரை நாங்கள் கேள்விப்பட்டிருக்கிறோம். ஒருமுறை நாகப்பட்டினம் வந்தபோது நீங்கள் சீனக் கழஞ்சுகள் கோவிலுக்கு கொடுத்ததாகச் சொல்லி அந்த கழஞ்சுகளை காட்டினார்கள். சொக்கத்தங்கமாக இருந்தது. அர்த்தநாரீஸ்வரருக்கு நீங்கள் மாலை அணிவித்தீர்களாம். தனியாக மரகத மாலை செய்து கொடுத்தீர்களாம். நீங்கள் அளித்த அந்த அர்த்தநாரீஸ்வரர் சிலையை நாங்கள் விழுந்து வணங்கினோம். உங்கள் பெயர் அப்போது சொல்லப்பட்டது. உங்களைப் பற்றி அங்கும் குறிப்பு இருக்கிறது."

"ஆமாம். அது நான் நிர்மாணித்ததுதான். இராஜேந்திர சோழர் மிகவும் சந்தோஷப்பட்டார்."

"ஆனால் நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறதே."

"அப்படித்தான் தோன்றுகிறது. அதை சீர் செய்ய வேண்டும். இராஜேந்திரரால் தான் முடியும்."

"செய்தது நீங்கள், சீர்செய்ய வேண்டியது இராஜேந்திரா. என்ன அபத்தம் இது" ஒரு அதிகாரி வாய் நிறைய வெற்றிலையுடன் பேசினார்.

அவர் மௌனமாக இருந்தார்.

"சரி, உள்ளே போய் வாருங்கள். எப்பொழுது திரும்புவதாக உத்தேசம்."

"தெரியவில்லை."

"இதை என்ன பதிலாக நாங்கள் எடுத்துக் கொள்வது."

"ஒருவேளை நாங்கள் திரும்பாமலேயே போகலாம்."

"ஏன் அப்படி சொல்கிறீர்கள்."

இராஜேந்திரர் எங்களை சிறை பிடித்து காராக்ரஹத்தில் அடைத்துவிடலாம். சோழ வணிகர்கள் மீது உண்டான பரிதாபத்தால் எங்களை தண்டிக்க முயற்சிக்கலாம்.

எனவே திரும்பி வரும் நேரம் பற்றி நான் என்ன ஐயா சொல்வது."

சோழ வீரர்கள் துணுக்குற்றார்கள். அவர் பேச்சில் உண்மை இருக்கிறது என்று புரிந்து கொண்டார்கள்.

"சரி. இருவரையும் அனுமதிக்கிறோம். ஆனால் ஒவ்வொரு நாள் இரவிலும் நீங்கள் தஞ்சையில் உள்ள தொண்டை அந்தண அதிகாரிகள் இருக்கும் இடம் வந்து நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்று தெரிவித்தல் வேண்டும். யாருக்கும் தெரிவிக்காமல் எங்கேயும் போகக்கூடாது. சந்தேகப்படும்படி நீங்கள் நடமாடினால் அதற்காகவும் சிறையில் தள்ளப்படுவீர்கள்."

அவர்கள் மௌனமாக தலை அசைத்தார்கள்.

"நீங்கள் உள்ளே போகலாம்." அகழிமேல் பலகை எடுக்கப்பட்டது. அவர்கள் குதிரையில் தாவி ஏறினர்.

"சீனக் கழஞ்சு ஒன்று இருக்குமா. இவர்களெல்லாம் பார்க்கவில்லை" என்று சொன்னார்கள்.

"தருகிறேன்." அவர் இடுப்பில் கை வைக்க,

"வேண்டாம் ஐயா, வேண்டாம். நான் இந்த நண்பர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காகத்தான் ஆசைப்பட்டேன். மற்றபடி இப்பொழுது வாங்கினால் அதை லஞ்சம் என்று நீங்கள் நினைத்துக் கொள்வீர்கள். சோழ தேசத்தில் லஞ்சம் வாங்கினால் கையை வெட்டி விடுவார்கள். எங்களுக்கு பொன் ஒன்றும் பார்க்க வேண்டாம். நீங்கள் போய் வாருங்கள்." அவர் மறுபடியும் கீழே இறங்கினார்.

இடுப்பிலிருந்து பொன் உருவி அந்த உருண்டை பொன்னை சோழ வீரர்களிடம் காட்டினார். சோழ வீரர்கள் கையில் அதை தூக்கி எடை போட்டார்கள். கண்ணுக்கு அருகே வைத்துப் பார்த்தார்கள். கன்னத்தில் வைத்துக் கொண்டார்கள்.

"சுத்தப் பொன். எப்படி சில்லென்று இருக்கிறது பார்" என்று சொன்னார்கள். அவரிடமே பொன்னை மிக மரியாதையாக கொடுத்தார்கள்.

"நல்லபடியாக போய் வாருங்கள். நம்முடைய உறவுகள் பலப்பட வேண்டும். அதற்குண்டான முயற்சியை செய்யுங்கள். சீன தேசத்திலிருந்து வருகின்ற பொருள்கள் தஞ்சையை நிறைய அலங்கரிக்கட்டும்" என்று சொல்ல,

அவர்கள் வணங்கி விடை பெற்றார்கள்.

'அந்தப் பொன்னை வாங்கிக் கொண்டிருக்கலாமோ' என்று முதலில் கேட்டவனுக்குத் தோன்றியது. ஆனால் தன் கை தன்னிடம் இருக்க வேண்டும் என்ற ஆசையில் அவன் மௌனமாக இருந்தான்.

"விமலன் அகதீஸ்வரன். ஸ்ரீ விஜய தேசத்து கன்மி.

அழைத்தவுடன் வந்துவிட்டாரா. சவுக்கு எங்கே எடுத்து வா."

"மன்னா அவசரப்படாதீர்கள். அவர் தூதுவ அதிகாரி. அவருக்கும் ஸ்ரீ விஜயத்து விஷயத்திற்கும் அதிகம் சம்பந்தம் இருக்காது, முரட்டுத்தனமாக நடப்பதில் எந்த லாபமும் இல்லை."

"முரட்டுத்தனமாக நான் நடக்கப்போகிறேன் என்று யார் உன்னிடம் சொன்னது." வழிமறித்த பரமன் மழபாடியை எகத்தாளமாக இராஜேந்திரர் வினவினார்.

"சவுக்கு எடுத்து வா என்று சொன்னேன். அடிப்பேன் என்றா சொன்னேன். சவுக்கு அவரை அடிப்பதற்கு அல்ல. வேறு ஒரு வரை அடிப்பதற்கு.

அடேய் இங்கு வா. அலறுவாயா." அருகிலுள்ள காவலனைக் கூப்பிட்டார். விழித்தான்.

"அடித்தால் அலறுவாயா."

"அடித்தால் அலறத்தானே வேண்டும்,"

"ஆக, அடிக்காமல் அலறுவாயா."

"அடிக்காமல் நான் எதற்கு அலற வேண்டும்."

"அட அலறடா."

"அலறாவிட்டால்.

"நிஜமாக அடிப்பேன், நன்றாக அடிப்பேன். அப்பொழுது நிஜமாகவே அலறுவாய். ஆனால் உன்னை அடிக்க எனக்கு இஷ்டமில்லை. நீ அலறுவதில்தான் இங்கு பல முக்கியமான விஷயங்கள் நடைபெறப் போகின்றன. என்ன, அடிக்காமல் அலறுவாயா."

"முயற்சிக்கிறேன் மன்னா."

"சரியாக அலறாவிட்டால் அடி முதுகில் விழும்." சவுக்கை கையில் வாங்கி படேர் என்று சொடுக்கினார்.

இராஜேந்திரர் என்ன செய்யப் போகிறார் என்று சபையில் உள்ளவர்களுக்கு தெரிந்துவிட்டது. பரமன் மழபாடி வாய் விட்டுச் சிரித்தார்.

சரி ஒரு நாடகம் நடக்கப் போகிறது.

"அடேய். வெற்றிலைப் பாக்கு கொண்டு வாருங்களடா" என்று சொல்லி இளந்தளிர் வெற்றிலையை தொடையில் வைத்து துடைக்க ஆரம்பித்தார்.

குருத்தன் கேசவனும், விமலன் அகதீஸ்வரனும் உள்ளே நுழைந்தார்கள். இருவர் முகத்திலும் பயத்தின் களை கொட்டிக் கிடந்தது.

தங்களை பரமன் மழபாடியாரிடம் அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். பரமன் மழபாடியார் சரி என்று தலை அசைத்தார்.

"அது, கிருஷ்ணன் ராமன் பிரம்மராயர். இது அருண்மொழிப்பட்டர். அவருடைய மகன். இது வந்தியத்தேவர். இது உத்தம சோழ மிலாடுடையார் இது அரையன் இராஜராஜன்" என்று சபையில் உள்ளோர்களை அறிமுகப்படுத்த,

"மன்னர் வரச்சொன்னார் வந்திருக்கிறோம். மன்னர் ஊரில் இருக்கிறாரா."

"தாராளமாக இருக்கிறார். உட்காருங்கள்." அடுத்து பெரும் குரல் கேட்டது.

"அடித்து பிய்த்து விடுவேன். உளவா பார்க்கிறாய். சோழ தேசத்தின்

உப்பை தின்றுவிட்டு சோழ தேசத்திற்கு எதிராகவா வேலை செய்கிறாய்." 'சொடேர் சொடேர்' என்று சவுக்கு வீசப்பட்டன. அடி விழுவது பலமாகக் கேட்டது. அவன் அலறினான். மிக பயங்கரமாக அலறினான்.

"இது போதாது, இன்னும் பயங்கரமாக அலற வேண்டும்" என்று அடிக்குரலில் கட்டளை இட்டார்.

"முயற்சிக்கிறேன் அய்யா."

"முயற்சிக்கிறாயா. இப்பொழுது அலறுகிறாய் பார்." இரண்டடி அவன் முதுகில் விழுந்தது.

அவன் முதுகை பிடித்துக் கொண்டு மீண்டும் பெரிதாக அலறினான்.

"விட்டுவிடுங்கள் விட்டுவிடுங்கள். இனிமேல் செய்யாதன் செய்யேன். விட்டு விடுங்கள். விட்டு விடுங்கள்" என்று கத்தினான்.

பரமன் மழபாடியார் வாய் கொள்ளாமல் சிரித்தார். கிருஷ்ணன் ராமன் பிரம்மராயர் அமைதியாக எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் இருந்தார். வந்தியத்தேவர் மெல்ல மீசையை தடவிக் கொண்டு எதிரே இருந்த இருவரையும் உற்றுப் பார்த்தார். அருண் மொழிப்பட்டன், இளவரசன் இராஜராஜித்தனோடு குசுகுசு என்று பேசிக் கொண்டிருந்தான்.

இராஜேந்திரர் முணுமுணுப்பாக ஏதோ பேசும் குரல் கேட்டது.

குருத்தன் கேசவனை எனக்குத் தெரியும். அவர் ஒரு அர்த்தநா ரீஸ்வரர் சிலையை கொடுத்திருக்கிறார். அதை நான் பார்த்திருக்கிறேன். மிக அழகான சிலை. அதனுடைய இடது கையில் கண்ணாடி இருக்கும் அல்லவா. அது வித்தியாசமாக இருக்கிறது" என்று சொல்ல,

பரிதாபமாக 'ஆம்' என்று குருத்தன் கேசவன் தலையாட்டினான்.

'அகதீஸ்வரன் கூட நிறைய பொன் நகைகளை தானம் செய்திருக்கிறார். அவர் பற்றியும் நாகையிலிருந்து செய்திகள் வருவதுண்டு. நாகையை வளமாக வைத்திருக்கிறீர்கள். ஆனால் ஸ்ரீ விஜயம் சரியாக இல்லை போலிருக்கிறதே."

"ஆமாம் சரியாக இல்லை."

"என்ன சரியாக இல்லை." சீற்றத்தோடு அருண்மொழிப் பட்டன் கேட்டான்.

"அங்கு ஸ்ரீமாறன் விஜயோத்துங்கவர்மன் ஆட்சி செய்து வந்தார். அவர் நோய்வாய்ப்பட்டு காலமாகிவிட்டார்."

"ஆமாம். கேள்விப்பட்டேன்."

"அவருடைய மகன் சங்கிராம விஜயோத்துங்கவர்மன் இப்பொழுது ஆட்சி செய்கிறார். அவருக்கு எதிராக வடக்குப் பக்கத்திலிருந்து கலகம் ஏற்பட்டிருக்கிறது."

"யார் கலகம் செய்வது?"

"பொதுமக்கள் தான் கலகம் செய்கிறார்கள். ஆனால் அந்த கலகத்திற்கு ஒரு பின்னணி இருக்கிறது."

"என்ன பின்னணி."

"ஸ்ரீ விஜயம் இந்துக்களுடைய தேசம். இந்துக் கோவில்கள் அங்கு அதிகம் இருக்கின்றன. இந்து வழிபாடுகள் மிகச் சிறப்பாக நடைபெறுகின்றன. அநேக மக்கள் இந்துக்களாக இருக்கிறார்கள். அங்கு வந்து குடியேறிய பௌத்த மதத்தினர், புத்த பிட்சுக்கள் அதை பௌத்த நாடாக மாற்ற வேண்டும் என்று முயற்சிக்கிறார்கள். ஜனங்களை பௌத்த மதத்திற்கு இழுக்கிறார்கள். அது மட்டுமல்லாது இந்துக்களை நோக்கி படை எடுக்க வேண்டுமென்று அவர்களை தூண்டுகிறார்கள். கடற் கொள்ளைக்காரர்களை எல்லாம் பௌத்தர்களாக மாற்றி வணிகத்தை தடுத்து நிறுத்த முயற்சிக்கிறார்கள். ஸ்ரீ விஜயத்தை பட்டினி போட முயற்சிக்கிறார்கள்.

சங்கிராம் விஜயோத்துங்க வர்மனால் இதை தடுக்க முடியவில்லை. அவர் புத்த பிட்சுக்களுக்கு பயப்படுகிறார். இந்துவாகவும் இருக்க ஆசைப்படுகிறார்."

"ஆக, மதக்கலவரம் சார்ந்த அரசியல். அரசியலுக்குள் மதக்கலவரம். அப்படியா."

"ஆமாம்."

"இதை எப்படி தீர்க்கப் போகிறார், புத்த பிட்சுக்களை எப்படி அடக்கப் போகிறார். புத்த பிட்சுக்களை வாள்முனையில் அடக்க முடியாது. அப்படி அடக்குவது பாபம் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். ஆனால் புத்த பிட்சுக்கள் அவ்விதம் நினைப்பது இல்லை. அதிகாரிகள் தளரவிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது இந்துக்களின் பாடுதான் மிக மோசமாக இருக்கிறது. இந்துக் கோவில்கள் இடி பட்டு விடுமோ என்ற அச்சம் கூட இருக்கிறது."

"இவ்வளவு மோசமான நிலையில் என்ன ஆட்டம் நீங்கள் போடுகிறீர்கள்."

"நாங்கள் எந்த ஆட்டமும் போடவில்லையே."

"நன்றாக இருக்கிறதே. உங்கள் கணவாய் வழியாக கப்பல் போனால் நீங்கள் வரி விதிக்கிறீர்களாமே. சீனக் கப்பல் வந்தால் அதற்கும் வரி உண்டாமே. இந்த இரண்டு பேரிடமும் வரி வாங்கிக் கொள்கிறீர்களாம். அதுதவிர மரக்கலத்துக்கு உள்ளே ஏறி உங்கள் கண்ணுக்கு பட்ட பொருள்களை நீங்கள் முதலில் எடுத்துக் கொள்கிறீர்களாம். சரக்கு இறக்குபவர்களுக்கு சோறு போடு என்று சொல்கிறீர்களாம். எல்லாம் நீங்கள் வைத்ததுதான் சட்டமாம். சகலத்திற்கும் சோழ வணிகர்கள் தலை ஆட்ட வேண்டுமாம்.

சீனர்கள் எதிர்த்தால் அவர்களை வேறு விதமாக சமாளிக்கிறீர்களாம். எப்படி என்று சொல்லட்டுமா."

"நானும் கேள்விப்பட்டேன். சீனர்கள் கலத்திலிருந்து சோழர் கலத்திற்கு மாறிய பிறகு அந்த சோழர் கலத்தை கொள்ளையடித்து எரியூட்டி, சீனர்கள் மறுபடியும் இங்கு வந்தால் யாரிடமும் வியாபாரம் செய்ய முடியாத ஒரு நிலையை உருவாக்கி விட்டார்கள்."

"அப்பொழுது உங்களுடைய தேசம் என்னவாகும்."

"வறுமையில் தத்தளிக்கும். அது யாருக்கும் தெரியவில்லை. பயந்து கொண்டு சோழ வீரர்கள், சோழ வணிகர்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள் என்று சரணடைவார்கள். இன்னும் அதிகமாக வரி விதிக்கலாம் என்ற யோசனையில் இருக்கிறார்கள்."

"இராஜேந்திர சோழரை பற்றி அவர்களுக்குத் தெரியாதா."

"எனக்குத் தெரியும். அவர்களுக்கு அதிகம் தெரியவில்லை. நான் தெரியப்படுத்த முயற்சித்தும் நடக்கவில்லை. புத்த பிட்சுக்கள் இராஜேந்திர சோழருக்கு எதிராக பிரச்சாரம் செய்கிறார்கள். அவன் இவ்வளவு தூரம் வந்துவிடுவானா. வந்தாலும் உங்களால் சமாளிக்க முடியாதா. இருபதாயிரம் வீரர்களோடு வருவான். இறங்கியவுடன் உதை வாங்குவான். காணாமல் போவான் என்று சொல்கிறார்கள்."

"உங்களுடைய எண்ணம் என்ன."

"இரண்டு லட்சம் வீரர்களோடு இராஜேந்திரர் வருவார் என்று நான் ஓலை அனுப்பியிருக்கிறேன்."

"என்ன ஆயிற்று?"

"கிழித்து போட்டுவிட்டார்கள்."

"எதை?"

"ஓலையை."

"அப்பொழுது போய் இறங்கினாலொழிய புத்தி வராது. அப்படித்தானே." பரமன் மழபாடியார் சீறினார்.

"ஆமாம். நீங்கள் போய் இறங்கினாலொழிய புத்தி வராது."

"ஆக, நீங்கள் இங்கு தூதுவராக கன்மியாக இருப்பது ஸ்ரீ விஜயத்தின் மீது இராஜேந்திர சோழரை படை எடுத்து வா என்று சொல்வதற்காகவா. நல்ல தூதுவரய்யா நீங்கள்."

"நான் ஸ்ரீ விஜயத்தின் மீது படை எடுத்து வரச் சொல்லவில்லை. ஸ்ரீ விஜயத்திலுள்ள இந்துக்களை காப்பாற்ற இராஜேந்திரர் உதவி செய்ய வேண்டுமென்று விரும்புகின்றேன். புத்த பிட்சுக்களின் கொட்டத்தை அடக்க வேண்டும் என்று விரும்புகின்றேன். புத்த பிட்சுக்கள் அடுத்தபடி நம்முடைய படை எடுப்பு நாகைக்கு என்று தீர்மானம் செய்திருக்கிறார்கள். நாகையை நோக்கி புத்த பிட்சுக்கள் வருகிறார்கள். அதிகம் பேர் வருவதற்காக கூடுதலாக மாடமாளிகைகள் கட்டப்பட்டு வருகின்றன. நாகை விகாரை பெரிதாகிக் கொண்டிருக்கிறது."

"இங்குள்ள புத்த பிட்சுக்கள் என்ன நினைக்கிறார்கள்."

"அவர்கள் எதைப் பற்றியும் வாய் திறப்பதில்லை. ஆனால் ஸ்ரீ விஜயத்திலிருந்து புத்த பிட்சுக்கள் வந்தால் வரவேற்று உபசரிக்க தயாராக இருக்கிறார்கள். வரவேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள்."

"என்ன காரணம்."

"சோழ தேசத்திலும் புத்த மதத்தை பரப்ப வேண்டும் என்று காரணம்."

"என்ன?" அத்தனை பேரும் எழுந்து நின்றார்கள்.

"இதுதான் உண்மையான காரணம். இதைப்பற்றி எனக்கு கவலை இருக்கிறது. இந்த கவலையை நான் புத்த பிட்சுக்களின் தலைமை புத்த பிட்சுவிடம் செலுத்தினேன்.

"என்ன நடக்குமோ அது நடந்தே தீரும். நீர் ஏன் கவலைப்படுகிறீர். உம்முடைய வேலையை பார்த்துக் கொண்டிரும்" என்று என்னை ஒதுக்கிவிட்டார்.

"நீ ஸ்ரீ விஜயத்து கன்மியா. அல்லது சோழ தேசத்திற்கான உளவாளியாக இங்கு செயல்படுகிறாயா."

"நான் உண்மைக்கு ஆதரவாக நிற்கிறேன். இராஜேந்திர சோழரின் வலிமையைப் பற்றி சிறிதளவும் தெரியாதவர்களாக ஸ்ரீ விஜயத்து மக்கள் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

அவ்வளவு தொலைவு இராஜேந்திர சோழர் போவாரா என்ற சந்தேகம் அவருக்கு மட்டுமல்ல எனக்கும் இருக்கிறது. கடாரத்து மக்களுக்கு இராஜேந்திரர் வருவார் என்ற நம்பிக்கை அறவே கிடையாது."

"எதனால் அந்த எண்ணம்?"

"ஏனெனில் சோழ தேசத்து மரக்கலன்கள் பலவீனமானவை. அவைகள் காற்றை நம்பி மட்டுமே பயணப்படுகின்றன. காற்று சரியில்லை எனில் நடுவழியில் உடைந்துவிடுகின்றன. எனவே ஒரு நல்ல மரக்கலத்தை சோழ தேசத்திலிருந்து நாங்கள் பார்த்ததே இல்லை. படை எடுத்து வர வேண்டுமென்றால் மிகச் சிறந்த மரக்கலன்கள் வேண்டும். உங்களிடம் இருக்கின்ற மரக்கலன்கள் வெறும் மூட்டை ஏற்றவும், பாத்திரங்கள் ஏற்றவுமே சரியாக இருக்கின்றன. நல்ல மரக்கலன்கள் இல்லாதபோது

எப்படி படை எடுத்து வர முடியும் என்ற கேள்விதான் எல்லோர் மனதிலும் இருக்கிறது."

"உங்கள் மனதிலும் இருக்கிறதா."

அவர் மௌனமாக இருந்தார்.

"கேட்கிறேன். உங்கள் மனதிலும் இருக்கிறதா," வந்தியத் தேவர் அதட்டினார்.

"ஆமாம். என் மனதிலும் இருக்கிறது, உங்கள் மரக்கலன்கள் நொய்மையானவை. வெறும் படகுகள், பாய்மரம் விரித்த படகுகள். நாவாய்கள் என்று அவைகளை சொல்லவே முடியாது.

சீனத்துக் கப்பல்களை பார்த்திருக்கிறீர்களா. மிகச் சிறந்த நாவாய்கள். உள்ளே தனித்தனியாக அறைகளும் படுக்கைகளும், மதுபானக் கூடங்களும் இருக்கின்றன. யானைகளும், குதிரைகளும் அதில் வருவதற்கு வசதி செய்யப்பட்டு இருக்கிறது. பருவக்காற்றை மட்டும் நம்பி இராமல் முப்பது முப்பது துடுப்பு போடுகின்ற வீரர்கள் உள்ளே இருக்கிறார்கள். அவர்களாலும் படகு செலுத்தப்படுகிறது. மிக வேகமாக சீனத்திலிருந்து மூன்று நாள் பயணத்தில் ஸ்ரீ விஜயம் வந்துவிடுகிறது.

நீங்கள் ஸ்ரீ விஜயத்திற்கு வர கிட்டத்தட்ட பதினைந்து நாட்கள் ஆகின்றன. அதற்குள் உங்களுடைய வியாபாரிகள் சோர்வடைந்து விடுகிறார்கள். சீனத்துத் தெம்பு உங்களிடம் இல்லை."

"ஆக, நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்."

"அதை இராஜேந்திரர் தீர்மானிக்கட்டும். இங்கு கன்மியாக இருக்க வேண்டுமென்றால் இருக்கிறேன். இல்லையென்றால் நான் உடனடியாக ஸ்ரீ விஜயம் திரும்புகிறேன்."

"திரும்பி...?"

"அங்கு போய் இராஜேந்திர சோழரின் வலிமையைச் சொல்கிறேன்."

"என்னவென்று சொல்வீர்கள்."

"நல்ல மரக்கலன்கள் கட்டப்படும் என்று சொல்கிறேன்."

"எதை வைத்துக் கொண்டு அப்படி சொல்கிறீர்கள்." அருண்மொழிப்பட்டன் கேட்டான்.

"இராஜேந்திர சோழரால் இயலாதது என்று எதுவுமே இல்லை. வேங்கிவரை படை எடுப்பவர் அதைத் தாண்டி இன்னும் கடற்கரை ஓரமாகப் போனால் பல பெரிய மரக்கலன்கள் இருப்பதை பார்த்துவிடலாம். அப்படி மரக்கலன்களை பார்த்துவிட்டால் அம்மாதிரியான மரக்கலன்கள் நமக்குத் தேவை என்பதை உணரலாம்.

சேர தேசத்திலிருந்து சமீபத்தில் இராஜராஜாதித்தன் இராஜேந்திர சோழரின் மகன் கொள்ளையடித்து பல கப்பல்களை நாம் இருக்கின்ற மேல் பட்டிணத்திற்கு அனுப்பி இருக்கிறார். அந்த நாவாய்கள் உங்களுடைய நாவாய்களை விட சிறந்தவை. அதில் பல வீரர்கள் பயணிக்கலாம். குதிரைகள் போக முடியமா என்று தெரியவில்லை. இப்படி பல்வேறு விஷயங்கள் ஒன்று சேர்ந்தால் ஸ்ரீ விஜயத்தை நோக்கி படை எடுப்பது என்பது இராஜேந்திர சோழருக்கு எளிது. ஆனால்..."

"என்ன ஆனால்."

"இங்கேயே இராஜேந்திர சோழருக்கு நாலாபுறமும் ஏகப் பட்ட தொந்தரவுகள் இருக்கின்றன. எனவே இராஜேந்திர சோழர் ஸ்ரீ விஜயம் நோக்கி கடற்படை எடுப்பு நடத்துவாரா என்ற கேள்வி எனக்கும் என் நண்பருக்கும் இருக்கிறது."

"மிகச் சரியான நினைப்பு." இராஜேந்திர சோழர் சவுக்கோடு உள்ளே நுழைந்தார். சிங்காசனத்தில் ஏறி அமர்ந்தார்.

இரண்டு கன்மிகளும் எழுந்து நின்றார்கள். அவரின் பாதம் தொட்டு வணங்கினார்கள்.

"இது எங்கள் தேசத்தின் சார்பாக" என்று சொல்லி நிமலன் ஒரு பொற்கிண்ணத்தை நீட்டினார்.

அதை பணிப்பெண் வாங்கிக் கொண்டாள்.

ஒரு கற்சிலையை நீட்டினான். அது நடராஜர் உருவத்தை மிக அழகாக செதுக்கி இருந்தது. அதையும் பணிப்பெண் வாங்கிக் கொண்டாள்.

"இவையெல்லாம் சரி, சந்தோஷம். உங்களை சிறை பிடிக்கப் போகிறேன் என்றோ, சவுக்கால் அடிக்கப் போகிறேன் என்றோ நினைக்க வேண்டாம். நீங்கள் பேசியது எனக்கு திருப்தி கரமாக இருந்தது. ஆனால் இராஜேந்திர சோழன் கடல் கடந்து வரமாட்டான் என்ற ஸ்ரீ விஜயத்தின் நினைப்பை அறுத்து எறிய உங்களால் என்ன செய்ய முடியும் என்பதை எனக்கு உடனடியாக விளக்குங்கள்."

"தாங்கள் ஓலை அனுப்பலாம்."

"கிழித்துப் போடப்படுமே." பரமன் மழபாடியார் சொன்னார்.

"ஆமாம். செவியில் ஏறாது, கிழித்துப் போடப்படும்."

"வேறு என்ன செய்யலாம்."

"இன்னொரு வணிகக் குழுவை அனுப்பலாம்."

"எதற்கு, கை வெட்டி ஒன்றாகக் கட்டவா."

"இல்லை. அந்த வணிகர்கள் போய் சீனர்களிடத்தில் இந்த விஷயத்தை சொன்னால் சீனர்கள் இந்த விஷயத்தை இன்னும் பக்குவமாக கையாளுவார்கள். சோழர்கள் இல்லாமல் சீனர்களுக்கு வியாபாரம் செத்துவிட்டது போல் இருக்கிறது. சீனர்களுடைய துணையோடு சோழ தேசத்து வணிகர்கள் சங்கிராம விஜயோத்துங்கவர்மனை சந்தித்தால் நல்லது நடக்க வாய்ப்பு இருக்கிறது.

ஆனால் அதை புத்த பிட்சுக்கள் தடுக்காது இருக்க வேண்டும். புத்த பிட்சுக்கள் தடுக்காமல் இருக்க."

"சொல்லுங்கள் தடுக்காது இருக்க."

"இன்னொரு புத்த பிட்சுவை நீங்கள் அனுப்ப வேண்டும். அவர் பேச்சு அவர்களை சமாதானம் செய்ய வேண்டும். நல்ல உறவு வேண்டும் என்று அந்த புத்த பிட்சுவுக்கு நீங்கள் அறிவுறுத்த வேண்டும். அவர் தலைமையில் சோழ தேசத்து வணிகர்கள் போய் சீனர்களுடன் கலந்து ஒட்டுமொத்தமாக எங்கள் வியாபாரத்தை குலைக்காதீர்கள் என்று சங்கிராம விஜயோத்துங்க வர்மனிடம் சொல்ல வேண்டும்."

"நல்லது உங்கள் யோசனை நன்றாக இருக்கிறது. இப்போது தலைமை

புத்த பிட்சு யார்."

அவர்கள் குசுகுசுப்பாய் ஒரு செய்தியை சொன்னார்கள்.

"ஸ்ரீ விஜயத்திலிருந்து இது குறித்து ஆட்கள் யாரேனும் வருவார்களா."

"வருவதற்கு முகாந்திரம் ஏதுமில்லை. ஆனால் அங்கேயும் தெளிவான புத்த பிட்சுக்கள் இருக்கிறார்யில். ஸ்ரீ விஜயம் வறுமையில் வாடும் என்று தெரிந்து கொண்டு, இது அரசியல் தீர்வு நடத்தப்பட வேண்டும் என்று சொல்லப்படுகின்ற இளம் புத்த துறவிகள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களால் எதுவும் செய்ய இயலாது."

"நல்லது. இது பற்றி யோசிக்கிறோம். உங்களுடைய பரிசுக்கு நன்றி. அமைதியாக எங்களுடைய தொண்டை மண்டல அந்தணர்கள் இருக்கின்ற அலுவலகத்தில் தங்கி உணவு உண்டு இளைப்பாறுங்கள். ஒவ்வொரு நாளும் அவர்களிடம் உங்கள் இருப்பைச் சொல்லுங்கள். தஞ்சையைக் கூட நீங்கள் சுற்றிப் பார்க்கலாம். எங்கள் படை பலத்தை கூட நீங்கள் கணக்கிட்டுக் கொள்ளலாம். வேண்டுமென்ற தகவல்கள் உங்களுக்கு கிடைக்கும். கொடுக்க வேண்டும் என்று நான் ஓலை தருகிறேன்.

பரமன் மழபாடியாரே அவருக்கு வேண்டுமென்ற உதவியை செய்யுங்கள். அவர்கள் கேட்கின்ற தகவலை கொடுக்க வேண்டும் என்று அதிகாரிகளுக்கு கட்டளை இடுங்கள்.

அவர்களை இப்போது நான் விடுவிக்கிறேன்" என்று சொல்ல

அவர்கள் இருவரும் எழுந்து நின்று கை கூப்பினார்கள். "உங்கள் கருணையான மனதுக்கு எங்கள் அன்பான வணக்கங்கள். நான் சிறைச் செல்ல வேண்டி இருக்குமோ என்ற பயத்தோடு வந்தேன்."

"அவ்வளவு பெரிய முட்டாள் அல்ல. ஒரு கன்மியை ஒரு தூதரக அதிகாரியை நான் எதற்காக சிறை செய்ய வேண்டும். சிறை வைத்து என்ன காணப் போகிறேன். எனக்கு பிரச்சனை தீர வேண்டும். இந்த பிரச்சனை தீர நீங்கள் உதவி செய்தால் இன்னும் மரியாதையாக நடத்தப்படுவீர்கள். உங்களுக்கு இந்த ஊரில் நில புலன்கள் ஒதுக்கவும் நான் ஏற்பாடு செய்வேன். ஸ்ரீ விஜயத்தை அழிப்பதோ, கடாரத்தை அழிப்பதோ என் நோக்கம் அல்ல. என் வணிகர்கள் மீது கை வைத்தால் நொறுக்கப்படுவீர்கள். இது மட்டும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

நீங்கள் சொல்வது போல் இப்போது போகின்ற படைக்கு ஏதேனும் ஒரு சிறு கீறல் விழுந்தால் கூட ஸ்ரீ விஜயம் தரை மட்டமாக்கப்படும். கடாரம் எரியூட்டப்படும். அங்குள்ள அத்தனை பட்டணங்களையும் நான் பாழடிப்பேன். இது சத்தியம். என் தாய் நிசும்பசூதனியின் ஆணையாக சத்தியம், இராஜராஜரின் ஆணையாக சத்தியம். என் தாய் வானமாதேவியின் ஆணையாக சத்தியம். இந்த சத்தியத்தை இரண்டாம் முறையாக செய்கிறேன். இதில்லிருந்து ஒரு நாளும் நான் மாற மாட்டேன்.

நீங்கள் போய் வரலாம்." அவர் விடை கொடுத்தார்.

அவர்கள் குனிந்து அவசர அவசரமாக வெளியே போனார்கள். அந்த ஓட்டத்தில் தப்பித்தோம், பிழைத்தோம் என்ற உணர்வு இருந்தது.

இராஜேந்திர சோழர் கவலையோடு உட்கார்ந்திருந்தார். "ஆக, நம்முடைய வாழ்க்கை வேறு பக்கம் திரும்பப் போகிறது இல்லையா, மருமகனே." வந்தியத்தேவர் எழுந்து நின்று மன்னருக்கு அருகே போய் கேட்டார்.

"ஆமாம். நான் வேங்கியோடு பல விஷயங்கள் முடிந்து விடும் என்று நினைத்தேன். கலிங்கர்களையும், ஒட்டர்களையும் அடித்து நொறுக்கிவிட்டு வரலாம் என்று நினைத்தேன். இப்போது நீங்கள் சொல்வது போல, கிழக்கு திசை நோக்கியும் நாம் போயாக வேண்டும். என்னுடைய கேள்வி அத்தனை தூரம் போக நம்முடைய வீரர்கள் தயாராக இருப்பார்களா. வேங்கிக்கு பிறகு இன்னொரு யுத்தம் என்றால் தயாராக இருப்பார்களா."

"வேங்கியை யுத்தம் என்று எப்படி நினைக்கிறீர்கள்." அருண் மொழிப்பட்டன் கேட்டான்.

"என்ன உளறுகிறாய் அருண்மொழி. வேங்கி, வந்தவுடன் உங்களை வரவேற்கும் என்று நினைக்கிறாயா."

"ஆமாம், வரவேற்கும்."

"என்ன சொல்லுகிறீர்கள் அரையன் இராஜராஜரே."

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. படை எடுத்து அங்கு போகப் போகிறோம் என்று தெரிந்தவுடன், ஜெயசிம்மனும் விஷ்ணுவர்தன் விஜயாதித்தனும் அந்த இடத்தை விட்டு ஓடி விடுவார்கள். நாம்

உடனடியாக அந்த இடத்தில் இராஜராஜ நரேந்திரனுக்கு பட்டம் சூட்டலாம்.

இதற்கிடையில் நீங்கள் சொன்னதாக ஒரு விஷயத்தை அருண் மொழி பட்டன் தெரிவித்தான். அம்மங்காதேவியை விமலாதித்தன் மகனான இராஜராஜ நரேந்திரனுக்கு நீங்கள் மணமுடிக்க தீர்மானிப்பதாகச் சொன்னான். மிக அருமையான முடிவு.

மேலைச்சாளுக்கியர்கள் எந்த விஷயத்தை செய்ய வேண்டும் என்று நினைத்தார்களோ, அதே விஷயத்தை நாம் செய்யப் போகிறோம். உங்களுடைய மகளை இராஜராஜ நரேந்திரனுக்கு மணமுடிப்பதால் உறவுமுறை இறுக்கமாகிறது. அப்பொழுது மகளை காப்பாற்ற இராஜேந்திரர் எதுவும் செய்வார் என்ற ஒரு பயம் அவர்களுக்கு ஏற்படும்.

உடனடியாக அவர்கள் அந்த இடத்தை விட்டு ஓட்டம் பிடிப்பார்கள். ஒட்டர்களையும், கலிங்கர்களையும் தான் நாம் எதிர்கொள்ள வேண்டி இருக்கும்."

"ஒட்டர்களுக்கு என்ன அவ்வளவு அக்கறை."

"ஒன்றுமில்லை. தேசம் பிடிப்பு. ஒட்டர்களுடைய தேசம் ஒன்றும் அவ்வளவு வளமானது அல்ல. கீழைச்சாளுக்கியம் பலமானது. கோதாவரிக்கும், துங்கபத்ரைக்கும் நடுவே இருக்கின்ற மிகப் பெரிய வயல்வெளி அது, அடர்ந்த காடுகள் உள்ளது. எனவே அந்த வளத்தை கொள்ளை அடிக்க வேண்டும் என்ற ஆசை. அரிசி சோறு திங்க வேண்டும் என்ற ஆசை ஒட்டர்களுக்கு வந்துவிட்டது. அந்த அரிசியும், அந்த எருமையும், அந்த பசுவும், அந்த கன்றும் அவர்களுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். ஆடுகளை அடித்து வர வேண்டும் என்ற ஆசையில் இந்தப் போர் நடக்கிறது.

தின்ன வேண்டும் என்றுதான் ஒட்டர்கள் படை எடுத்து வருகிறார்கள். அடித்து நொறுக்கினால் காணாது போவார்கள்."

"கடுமையான போர் இருக்கும் என்று நினைக்கிறீர்களா."

"ஆமாம், கடுமையான எதிர்ப்பு இருக்கும். அவர்களுடைய இடம். சட்டென்று பரவி காணாமல் போய் மறுபடியும் ஒன்று கூடி அடிப்பார்கள். நமக்கு அந்த இடத்தினுடைய தடம், மேடு, பள்ளம் எதுவும் தெரியாது.

எனவே ஒற்றர்கள் துணையோடு தான் நாம் அங்கு முன்னேற முடியும்."

"நன்றாக சொன்னீர்கள். ஒற்றர்களின் துணையோடுதான் நாம் அங்கு போக முடியும். ஒற்றர்களை இப்போதே அனுப்பினால் என்ன."

"நன்றாக அனுப்பலாம். யார் ஒற்றர்கள் என்பதுதான் முக்கியம். சோழ தேசத்து வீரர்களை அவர்கள் எளிதாக இனம் கண்டு கொள்கிறார்கள்.

ஒட்ட தேசத்து முகங்கள் வேறு, கலிங்க தேசத்து முகங்கள் வேறு. ஏன் கீழைச்சாளுக்கியர்கள் முகங்களே வேறு. அந்த முகங்களோடு பார்க்கிறபொழுது சோழ தேசத்து கூர்மையான மூக்கும், மெல்லிய உதடும் அவர்களுக்கு மிக எளிதாக இவன் நம்முடைய ஆள் இல்லை என்று தெரிவித்து விடுகிறது.

எனவே, உளவாளியாக ஒருவன் அவ்வளவு தொலைவு போவது என்பது எளிதல்ல. கீழைச்சாளுக்கியம் வரை போகலாம். உருவ ஒற்றுமை பெரிதாக பாதிக்காது. கீழைச் சாளுக்கியத்தின் மொழியை பேசினால் போதும் அவர்கள் சமாதானம் ஆகிவிடுவார்கள்.

கீழைச் சாளுக்கியம் தாண்டி ஒட்ட தேசம் போகும்போது யார் போவது. நம்முடைய சோழ வீரர்களா? பரமன் மழபாடி கேட்டார்.

"அந்தணர்களை அனுப்பினால் என்ன?" இராஜேந்திரர் கேட்க சபை மௌனமாய் இருந்தது.



# அத்தியாயம்



*த*ருமபாலர், விசாரதத்தர் என்ற அந்த இரண்டு புத்த பிட்சுக்களும் அலண்டு போய் கிடந்தார்கள். கடல் பயணம் இவ்வளவு கடினமாக இருக்கும் என்று அவர்கள் நினைக்கவே இல்லை. படகோட்டிகள் தைரியமாக இருந்தாலும் கரை சேருமா என்ற கவலை அவர்களுக்கு இருந்தது. ஓயாது புத்த நாமம் சொன்னார்கள். சில சமயம் வாய்விட்டு அலறினார்கள். கரை தொட்டதும் விக்கி, விக்கி அழுதார்கள்.

நேரே போய் ஸ்ரீ விஜயத்து கன்மியிடம் தங்களை ஒப்படைக்க வேண்டும் என்று பரபரத்தார்கள். ஆனால் ஸ்ரீ விஜயத்து கன்மியும் இல்லை. கடாரத்து கன்மியும் இல்லை. இரண்டு தூதுவ அதிகாரிகளும் இராஜேந்திர சோழர் உத்தரவின் பேரில் தஞ்சாவூர் போய்விட்டார்கள். திருவாரூர் வழியாக, அம்மன் பேட்டை வழியாக மேற்கே நடக்கின்ற நேர் சாலையில் நடந்தால் தஞ்சாவூர் போய்விடலாம் என்று சொல்ல, அவர்கள் விரைவான நடையாய் தஞ்சாவூர் நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள்.

மழிக்கப்பட்ட தலையும், சவரம் செய்யப்படாத முகமுமாய் அவர்கள் பார்ப்பதற்கு வினோதமாக இருந்தார்கள். அவர்களுடைய துறவு ஆடை மிக அழுக்கடைந்ததாய் இருந்தது. எப்பொழுதும் போலஅவர்களும் தஞ்சையின் தென் புறம்படியில் தடுத்து நிறுத்தப்பட்டார்கள். அகழிக்கு அந்தப் பக்கம் நிறுத்தி வைக்கப்பட்டார்கள்.

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

அவர்களுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. தயங்கினார்கள். அந்த தயக்கம் அபத்தமாக இருந்தது. ஆனால் ஒரு புத்த பிட்சு பொய்

சொல்வதற்கில்லை என்பதால் உண்மையை சொல்ல வேண்டுமென்று தீர்மானித்தார்கள்.

"நாங்கள் ஸ்ரீ விஜயத்திலிருந்து வருகிறோம்."

சோழ வீரர்கள் சட்டென்று துணுக்குற்றார்கள்.

"என்ன எங்கிருந்து."

"ஸ்ரீ விஜயத்திலிருந்து."

"எதற்காக வந்திருக்கிறீர்கள்."

"இராஜேந்திர சோழரை பார்த்து சில செய்திகள் சொல்ல வேண்டும் என்று."

"என்ன செய்திகள்."

"இராஜேந்திர சோழனிடம்தான் சொல்ல வேண்டும்."

"முடியாது. இப்பொழுது இங்கே சொல்லப்பட வேண்டும். இல்லாவிட்டால் உங்களை நான் என்ன செய்வேன் என்று தெரியாது."

"ஸ்ரீ விஜயத்தில் நிலைமை நன்றாக இல்லை."

"என்ன நிலைமை."

அரசியல் நிலைமை."

"எதனால் நன்றாக இல்லை."

"தந்தை இறந்த பிறகு மகன் ஆட்சிக்கு வந்தார். மகனுக்கு சாமர்த்தியம் இல்லை. எனவே உள்ளுக்குள் கலவரங்கள் துவங்கி அவர் மீது படை எடுப்பு நடந்து, அந்த படை எடுப்பை ஓரளவு எதிர்கொண்டிருக்கிறார். ஆனால் அந்த படை எடுப்பு தாண்டி வேறு சில விஷயங்கள் நடந்துவிட்டன்."

"என்ன."

"சோழ தேசத்து வணிகர்கள் சித்ரவதை செய்யப்பட்டார்கள்."

"எப்படி?"

"சவுக்கால் அடித்தும், பிரம்பால் அடித்தும் கொடூர முறையில் நடத்தப்பட்டார்கள்."

"வேறென்ன கொடூரம்."

"கைகளை செதுக்கி ஒன்றாக கட்டினார்கள்."

"பிறகு."

"கால் கட்டை விரலை தரித்தார்கள்."

"இப்படிப்பட்ட செயல்களை செய்துவிட்டு அவர்களை நோக்கி வந்திருக்கிறீர்களே. அந்த தேசம் நோக்கி வந்திருக்கிறீர்களே, என்ன துணிச்சல்."

"எங்களிடம் பொய் சொல்லுவதற்கோ, மறைப்பதற்கோ எதுவும் இல்லை. இரண்டு தேசத்திற்கும் நல் உறவு நீடிக்க வேண்டும் என்று நாங்கள் விரும்பினோம். ஸ்ரீ விஜயத்து கன்மிகளையும், கடாரத்து கன்மிகளையும் சந்திக்க வேண்டும் என்று தான் நாங்கள் விருப்பப்பட்டோம். எங்களுக்கு முன்னே அவர்கள் போய் விட்டார்கள் என்பதால் நாங்கள் பின்தொடர்ந்து வந்தோம்."

"உங்களை இந்த விதமாக நாங்கள் அனுப்ப முடியாது. இப்பொழுதே உங்களை கைது செய்கிறோம். புத்த பிட்சு என்பதால் பின் கை கட்டி, கண்களைக் கட்டி உங்களை இழுத்துப் போவப் போவதில்லை. மாறாக ஒரு சிறு தேரில் ஏற்றி வீரர்கள் புடைசூழ உங்களை அனுப்புவோம். நீங்கள் அங்கு போய் யாரை சந்திக்க வேண்டுமோ, அதற்குண்டான விஷயத்தை சொல்லி சந்திக்க முயற்சி செய்யுங்கள்" என்று தலைவன் உத்தரவிட்டான்.

"இவர்கள் கையை தேரோடு பிணைக்க வேண்டுமா" என்று வீரன் கேட்க,

"வேண்டாம், பிணைக்க வேண்டிய அவசியம் இல்லை. மாறாய் தப்பித்துப் போக முயற்சித்தால், இறங்கி கத்தி இறக்கி கொன்றுவிடு. புத்த பிட்சு என்று பார்க்காதே" என்று கட்டளை இட்டான்.

அந்த புத்த பிட்சுக்களுக்கு தூக்கி வாரிப் போட்டது.

ஸ்ரீ விஜயத்தில் இப்படிப்பட்ட அவமரியாதை கிடையாது. சோழ தேசத்தில் புத்த பிட்சுக்களுக்கு மதிப்பு இல்லை என்பதை பலவிதமாக தெரிந்து கொண்டார்கள். வழியில் ஒரு உற்சவ சிலை வந்து கொண்டிருக்க அதற்கு எதிரே முரசுகள் முழங்க, தாள வாத்தியங்கள் முழங்க இரண்டு பெண்மணிகள் துள்ளி குதித்து நடனமாடிக் கொண்டிருந்தார்கள். சுற்றி பெரிய கூட்டம் இருந்தது. அவர்களை ஒதுக்கிக் கொண்டு இவர்கள் போக,

"மொட்டை போகிறதடா. மொட்டை போகிறதடா" என்று பல குழந்தைகளும், பெரியவர்களும் கூவினார்கள்.

புத்த பிட்சுக்களை மொட்டைகள் என்று ஸ்ரீ விஜயத்தில் சொல்வது இல்லை. ஆனால் சோழ தேசத்தில் சொல்கிறார்கள். புத்த பிட்சுக்களுக்கு மரியாதை இல்லை என்று தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது.

"என்ன முட்டாள்தனம் இது. உங்களை யார் வரச் சொன்னது." குருத்தன் கேசவன் தலையில் அடித்துக் கொண்டான்.

நிமலன் சுழண்டு போய் நாற்காலியில் உட்கார்ந்தார்.

"தேவை இல்லாத வம்பு. நாங்கள் தப்பித்து எப்படி வெளியே போகப் போகிறோம் என்று பயந்திருக்க, இப்படி வந்து நிற்கிறீர்களே. நீங்கள் என்ன ஸ்ரீ விஜயத்து தூதுவர்களா, அதற்குண்டான முத்திரை மோதிரமும், அதற்குண்டான அடையாளங்களும் இருக்கின்றனவா. நீங்களாக வந்து ஒரு விஷயத்தைச் சொன்னால் இராஜேந்திரச் சோழர் கேட்டுவிடுவாரா. இராஜேந்திர சோழரை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். யாரும் அணுக முடியாத இடத்தில் இருக்கிறார். அதற்கு முன்பு நீங்கள் ஆறு அதிகாரிகளை சந்தித்தாக வேண்டும். அந்த அதிகாரியும் உங்களை இராஜேந்திர சோழரிடம் அழைத்துப் போக மாட்டார்கள்.

ஒன்று புரிந்து கொள்ளுங்கள். இது சோழ தேசம். ஸ்ரீ விஜயம் அல்ல. புத்த பிட்சு வந்தால் எழுந்து நிற்க மாட்டார்கள். மாறாக உங்களை பிரம்பால் அடித்துக் குப்புறப் படுக்க வைப்பார்கள். மிக மோசமான காலத்தில், மிகக் கேவலமான முறையில் வந்து நிற்கிறீர்கள்.

உடையை சரி செய்து கொள்ளுங்கள்" என்று வேகமாக உத்தரவுகள் கொடுக்க, அவருக்காக பணி அமர்த்தப்பட்ட வேலை ஆட்கள் அந்த புத்த

பிட்சுக்களுக்கு உதவி செய்தார்கள்.

தொண்டை மண்டல அந்தணரிடம் போய் யார் வந்திருக்கிறது என்று விரிவாக தெரிவிக்க, தொண்டை மண்டலத்து அந்தணர்கள் அவர்களை, அருகே நின்று குறிப்பெடுத்துக் கொண்டார்கள். அங்க அடையாளங்களை எடுத்துக் கொண்டார்கள்.

"உங்கள் கைகளில் ஒரு ஒலையைக் கட்டப் போகிறோம். அந்த ஓலையை நீங்கள் கவனமாக வைத்திருக்க வேண்டும். நீங்கள் இப்போதைக்கு சோழ தேசத்தின் கைதி. எந்தவித அடையாளமும் இல்லாமல் கடல் மார்க்கமாக வந்திருக்கிறீர்கள். உங்களை உளவாளிகள் என்று நாங்கள் தீர்மானிக்கலாம். ஆனால் புத்த பிட்சுவாக இருப்பதால் அப்படி தீர்மானிக்கவில்லை. ஒருவேளை அரசாங்கம் அப்படி தீர்மானித்தால் உங்களுக்கு சிறை தண்டனை நிச்சயம்.

இப்போதைக்கு சந்தேகப்படும் படியான நபர் என்று ஒரு ஒலை உங்கள் கையில் இருக்கும். அதை கழட்டக்கூடாது. அதை கழற்றினாலும் மிகப்பெரிய தண்டனை உண்டு" என்று சொல்ல,

புத்த பிட்சு 'சரி' என்று தலை அசைத்தார்.

உடம்பு அசதி தீர அவர்கள் வெந்நீரில் குளித்தார்கள். வேறு காவி உடை கேட்டு வாங்கி அவர்களுக்கு போர்த்தி விட்டார். சவரம் செய்த முகத்தோடு மிகச் சுத்தமாக இருந்தார்கள். தியானம் செய்தார்கள். உணவு உண்டார்கள். படுத்து தூங்கினார்கள்.

அவர்கள் வருகை அருண்மொழிப்பட்டனுக்கு சொல்லப்பட்டது.

அருண்மொழிப்பட்டன் கிருஷ்ணன் ராமனிடமும், பரமன் மழபாடியிடமும் சொல்ல, அவர்களை நாமே சந்திக்கலாம். அரசர் சந்திக்க வேண்டாம் என்று அவர்கள் தீர்மானம் செய்தார்கள்.

"ஆனால் அரசரிடம் தெரிவிப்பது நல்லதல்லவா."

"ஆமாம். தெரிவிக்காமல் இருப்பது சரியல்ல. புத்த பிட்சுக்கள் வந்திருக்கிறார்கள். நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். என்று சொல்லுங்கள். சொல்லிப் பாருங்கள்." அருண்மொழி அலுப்போடு பேசினான்.

"என்ன."

"உடனே பாய்ந்து ஓடி வந்து விடுவார். அவருக்கு புத்த பிட்சுக்கள் மீது மிகப்பெரிய கோபமும், சந்தேகமும் உண்டு."

"எங்களுக்கும் தெரியும். சமாதானப்படுத்தி பார்க்கலாம்."

ஆனால் சமாதானம் ஆகவில்லை.

"உடனே இங்கு இழுத்து வா" என்று சொல்லப்பட்டது. அவர்களை தூக்கத்திலிருந்து எழுப்பி மாலை நேரம் இராஜேந்திர சோழர் முன்பு நிறுத்தி வைத்தார்கள். கன்மிகளையும் வரவழைத்து வேறொரு அறையில் வைத்தார்கள்.

"என்ன சமாச்சாரம், எங்கிருந்து வருகிறீர்கள்."

புத்த பிட்சுக்கள், தாங்கள் வந்த நோக்கத்தையும், தாங்கள் கண்ட காட்சியையும், அதனால் மனம் பாதிக்கப்பட்டதையும் அதற்கு நிவாரணமாக ஏதேனும் செய்ய வேண்டும் என்ற எண்ணம் வந்ததையும், அதனால் தனியாக, துணிச்சலாக ஒற்றைப் பாய்மரம் போன்ற நாவாய் ஏறி வந்ததையும், இங்குள்ள கன்மிகளிடம் விஷயம் சொல்லி இன்னும் தெளிவாக, யோசித்து உங்களிடம் வரலாம் என்று இருந்தோம். ஆனால் நடுவழியில் கைது செய்யப்பட்டோம்."

"உங்கள் கன்மிகள் என்ன சொன்னார்கள்."

"அவர்களுக்கு இன்னும் அதிக விஷயம் தெரிந்திருக்கிறது. அவர்கள் இதற்கெல்லாம் காரணம் தலைமை பிட்சு என்று சொல்கிறார்கள். எங்களுக்கு தலைமை பிட்சு அப்படி இருப்பார் என்று நோக்கம் இல்லை. அவர் சமாதானப்படுத்தக்கூடும்.

கடாரத்து மக்கள் ஸ்ரீ விஜயத்தின் மீது கோபமாக இருக்கிறார்கள். ஸ்ரீ விஜயம் என்பது கடாரம் சேர்ந்ததுதான். நடுவே கணவாய் இருக்கிறது. அந்த கணவாய் இருப்பதால் கடாரத்து மக்கள் தாங்கள் தனி ராஜ்ஜியம் என்றும், ஸ்ரீ விஜயம் தனி ராஜ்ஜியம் என்றும் பேசிக் கொள்கிறார்கள். அப்படியே நடந்து கொள்கிறார்கள்."

"உண்மையில் அப்படி இல்லை அல்லவா."

"உண்மையில் அப்படி இல்லை."

"ஏன் அப்படி ஆயிற்று."

"ஸ்ரீமாறன் விஜயோத்துங்க வர்மன் இருந்தபொழுது கடாரத்தின் மீது அவருடைய ஆளுமை பலமாக இருந்தது. அவர் திடீரென்று இறந்து போனார்."

"என்ன காரணம்."

"உடல்நலம் சரியில்லை."

"ஏன் உடல்நலம் சரியில்லை."

"தெரியவில்லை."

"கொல்லப்பட்டிருக்கலாமா."

"இல்லை. அதற்குண்டான வாய்ப்பு இல்லை. புத்த பிட்சுக்கள் தான் உதவி செய்தார்கள். அவர்கள் தான் சிகிச்சை செய்தார்கள்."

"புத்த பிட்சுக்களே கொன்றிருக்கலாமா."

"அப்படியும் வாய்ப்பு இல்லை."

"ஏன் வாய்ப்பு இல்லை. புத்த மதமாக ஸ்ரீ விஜயத்தை மாற்ற வேண்டும். இந்து தேசமாக இருக்கின்ற ஸ்ரீ விஜயத்தை புத்த மதத்திற்கு மாற்ற வேண்டும் என்ற எண்ணம் புத்த பிட்சுக்களுக்கு உண்டல்லவா."

"உண்டு."

"அவர்கள் இதை நடத்தி இருக்கலாமா." இராஜேந்திரர் கேள்வி மீது கேள்வி போட அவர்கள் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது.

"அப்படியும் நடந்திருக்க வாய்ப்பு இருந்திருக்கிறது. ஆனால் நடந்தது அப்படி அல்ல."

கடாரத்து மக்கள் படை எடுத்து கணவாய் தாண்டி ஸ்ரீ விஜயத்துக்குள் நுழைந்தார்கள். சங்கராம விஜயோத்துங்க வர்மன் அதை எதிர்த்தார்.

கடுமையாக போரிட்டார். கடார மக்கள் பின்வாங்கினார்கள். ஆனால் கடார மக்களுக்கும் ஸ்ரீ விஜய மக்களுக்கும் இடையே தீராத பகை மூண்டுவிட்டது. இந்தப் பகையை தீர்த்துக் கொள்ள கருதியே, ஸ்ரீ விஜயத்துக்கு வருகின்ற சோழ தேசத்து கப்பல்களை எப்படியேனும் தடுத்து நிறுத்த வேண்டும் என்று கடாரத்து கப்பல் கொள்ளைக்காரர்களால் நடந்தது.

கடாரத்து போர்வீரர்கள் அந்த கப்பல் கொள்ளைக்காரர்களுக்கு காசு கொடுத்து, சோழ தேசத்து கலன்களை உடைக்கச் சொன்னார்கள்."

"ஏன் சீன தேசத்து கலன்களை உடைக்க வேண்டாமா."

"முடியாது."

"ஏன்"

"அதில் வில் எறிகின்ற வீரர்கள் உண்டு. சீன தேசத்து கப்பல்கள் விரைவானவை. மிகப்பெரியவை. சோழ தேசத்து கப்பல்கள் சுக்கானை உடைத்தால் போதும். உட்கார்ந்துவிடும். எனவே அவர்கள் எளிதாக உடைக்கக்கூடிய சோழ தேசத்து நாவாய்களை கைப்பற்றினார்கள். உள்ளுக்குள் இருந்த பொருள்களை கொள்ளை அடித்தார்கள். சுக்கானை உடைத்து பாய்மரத்திற்கு தீயிட்டு கடலில் மூழ்கடித்தார்கள்."

"இப்பொழுது இதனால் என்ன லாபம்?"

"சீனதேசம் பண்டங்களை ஏற்றிக்கொண்டு ஸ்ரீ விஜயத்திற்கு வருவதற்குக் காரணம் சோழ தேசம்தான். இப்படி நாலு நாவாய்களை உடைத்தால் சோழ தேசம் வராது என்பது அவர்களுடைய எண்ணம்."

"இதற்கு என்ன வழி."

நீங்கள் மிகச் சிறந்த தளபதிகளை அங்கு அனுப்பி விஜயோத்துங்க வர்மனிடம் பேச வேண்டும்."

"அவனிடம் பேச வேண்டுமா. தலைமை புத்த பிட்சுவிடம் பேச வேண்டுமா."

"இரண்டு பேரிடமும் பேசலாம்."

"எதற்காக புத்த பிட்சுவிடம் பேசுவது. புத்த பிட்சுவுக்கும், அரசியலுக்கும் என்ன சம்பந்தம். ஆக, சங்கிராம விஜயோத்துங்க வர்மனை ஆட்டி வைப்பது உங்கள் தலைமை பிட்சு. சரியா?"

"அப்படி நேரடியாக சொல்ல முடியாது. ஆனால் கடாரம் படை எடுத்துவரும் என்ற எச்சரிக்கையை எங்கள் தலைமை பிட்சு சொன்னார்."

"அவருக்கு எப்படித் தெரிந்தது."

"அங்குள்ள புத்த பிட்சுக்கள் இங்கு செய்தி சொல்கிறார்கள்."

"ஆக, புத்த பிட்சுக்கள் எல்லா இடத்திலும் உளவாளிகளாக இருக்கிறார்கள். நீங்கள் வந்ததும் சோழ தேசத்தின் நிலைமை என்ன என்று உளவு பார்க்கத்தான் என்று நான் கருதக்கூடாதா."

"உண்மையில் அப்படி இல்லை. புத்தர் மீது ஆணையாக அப்படி இல்லை."

"இந்த ஆணையை சொல்லிவிட்டால் நான் பயந்து விடுவேனா. உங்கள் இரண்டு பேரையும் சிறையில் அடைக்கிறேன். உங்களுக்கு பின்னாலேயே இந்த புத்த பிட்சுக்கள் வந்திருக்கிறார்கள். உங்கள் மீதும் எனக்கு சந்தேகம் இருக்கிறது." கன்மி களை நோக்கி இராஜேந்திரர் பேச,

அவர்கள் தலைகுனிந்து நின்றார்கள்.

"நாங்கள் ஒரு தர்மசங்கடமான நிலையில் நிற்கிறோம். எங்களுடைய அனுமதி இல்லாமல் தான் இவர்கள் வந்திருக்கிறார்கள்."

"அது தெரிகிறது. ஆனால் ஒரு புத்த பிட்சு நினைத்தால் ஒரு அரசியலில் எப்படி வேண்டுமானாலும் நுழைந்து விடலாம் என்ற நம்பிக்கையை கொடுத்திருக்கிறீர்களே. அதுதான் ஆத்திரமாக இருக்கிறது.

சோழ தேசத்தில் பல சைவ மடங்கள் இருக்கின்றன. பல வைணவ மடங்கள் இருக்கின்றன. எவையும் அதனதன் வேலையை பார்த்துக் கொண்டிருக்கிறதே தவிர, அரசியலில் நுழையவில்லை. நாங்கள் அழைத்தாலும் வருவதில்லை. அப்படி இருக்க புத்த பிட்சுக்கள் அரசியலில் நுழைகிறார்களே இது என்ன அயோக்கியத்தனம். நாளை நான் வேங்கியை நோக்கி கிளம்புகின்றேன். எப்படியும் வருவதற்கு ஆறுமாதம் ஆகலாம்.

மேலும் தொடரலாம். அதுவரை நீங்கள் எங்களுடைய தேசத்தில் அதிதியாக இருங்கள். நீங்கள் மிகக் கவனமாக கண்காணிக்கப்படுவீர்கள். ஒரு மாளிகையிலேயே இருக்கும்படி வற்புறுத்தப்படுவீர்கள். அதாவது உங்கள் நால்வருக்குமே நான் வீட்டுக்காவல் வைக்கிறேன்.

யாரேனும் தப்பிக்க முயற்சி செய்தால் சிரச்சேதம் செய்வது என்னுடைய ஆணை.

கிருஷ்ணன் ராமன் அவர்களே, இவர்களை சிறைக் கைதிகளாக ஒரு மாளிகையில் அடைத்து வையுங்கள். வேண்டும் மட்டும் உணவு கொடுங்கள். எங்கேயும் போகக்கூடாது என்று சொல்லுங்கள்."

"மன்னா, எங்களை அப்படி அடைத்துவிட வேண்டாம். எங்களுக்கு விடுதலை கொடுங்கள். நாங்கள் உடனடியாக ஊர் திரும்புகின்றோம்." புத்த பிட்சுக்கள் கெஞ்சினார்கள்.

"ஊர் திரும்பி என்ன செய்வீர்கள்."

"இராஜேந்திர சோழர் நினைத்தால் எதையும் சாதிப்பார். அவர் வேங்கி நோக்கி போய்க்கொண்டிருக்கிறார். மறுபடியும் இந்தப் பக்கம் திரும்பும்போது ஸ்ரீ விஜயத்தின் மீது படை எடுப்பார் என்று சொல்கிறோம்."

"எந்த நம்பிக்கையில் சொல்கிறீர்கள்."

"உங்களுடைய வணிகர்கள் பட்ட வேதனையை நான் கண்ணால் பார்த்தேன். முடிந்த அளவு தடை செய்தேன். அந்த முரடர்கள் கேட்கவில்லை."

"ஆக, எங்கள் சோழ வீரர்களுக்காக நீங்கள் பரிந்து வந்தீர்களா."

"ஆமாம் மன்னா, சத்தியமாக பரிந்து வந்தேன். விசாரதத்தர் பேசினார்.

"எங்களுடைய வணிகர்கள் இதை உங்களிடம் சொல்வார்களா."

"நிச்சயமாக, உங்கள் வணிகத் தலைவரை எங்களுக்குத் தெரியும். எங்களுடைய பெயரும் அவருக்குத் தெரியும். அவரை வரவழையுங்கள். அவரைக் கேளுங்கள். நாங்கள் தடுத்து நிறுத்தியதும், இதைச் செய்வது மகாபாபம் என்று சொன்னதும் அவருக்குத் தெரியும்."

வணிகர் அரை நாழிகையில் வரவழைக்கப்பட்டார். உள்ளே படி ஏறினார்.

"அடே, விசாரதத்தர், தருமபாலர்" என்று கூவினார். வணக்கம் சொன்னார்.

"வணிகத் தலைவரே, இவர் சொல்வது உண்மையா. உங்களை சித்ரவதை செய்யக்கூடாது என்று தடுத்தார்களாமே."

"ஆமாம், வெகுவாக முயற்சித்தார்கள். அவர்களுடைய கையில் இருக்கின்ற கத்தியை பிடுங்கி கீழே போட்டார்கள். ஆனால் இவர்களை புறம் தள்ளிவிட்டு, அவர்கள் முன்னேறி மறுபடியும் எங்கள் கைகளை சிதைத்தார்கள். இவர்கள் மறுபடியும் முன்னேற இவர்களை நோக்கி வாட்கள் நீண்டன. பொதுவாக புத்த பிட்சுக்களுக்கு எதிராக வாள் நீட்டப்படாது. ஆனால் கடாரத்தைச் சேர்ந்த அவர்கள் வாளை நீட்டி புத்த பிட்சுவை ஓரமாக உட்கார வைத்து விட்டார்கள்."

"ஆக, இவர்களுடைய எண்ணம் நல்ல எண்ணம் என்கிறீர்களா."

"நிச்சயமாக இவர்கள் நல்லவர்கள். இவர்களுக்கு அரசியலில் ஆர்வம் இல்லை. ஆனால் ஸ்ரீ விஜயம் அமைதியாக இருக்க வேண்டும், அது தான் எண்ணம். இவர்கள் அமைதியான ஒரு தேசத்தில் தான் புத்த மதத்தை பரப்ப முடியும் என்று நினைக்கிறார்கள். புத்த மதத்தை பரப்புவது இவர்களுடைய எண்ணம்."

"இவர்களை கைது செய்து அடைக்கவா, திருப்பி அனுப்பி விட வா."

வியாபாரி தலைகுனிந்து யோசித்தார்.

"இவர்களால் நமக்கு எந்த கெடுதலும் இல்லை. இவர்களை கைது செய்ய வேண்டிய அவசியம் இல்லை. இவர்களுக்கு நம்மை பற்றிய பல விவரங்கள் கொடுத்து, நம்முடைய படைகளை பற்றிய விஷயங்களை கொடுத்து ஸ்ரீ விஜயம் நோக்கி அனுப்பலாம். மிகச் சிறந்த நாவாய்கள் நம்மிடம் இருக்கிறது என்று சொல்லலாம். சேர தேசத்திலிருந்து வந்த நாவாய்களை காட்டலாம்.

சோழ தேசத்து நகருக்குள் ஸ்ரீ விஜய கன்மிகளாக, கடாரக் கன்மிகளாக

வந்திருக்கின்ற இந்த இருவரும் இன்னும் சிறந்தவர்கள். இவர்களுக்கு நம்முடைய வணிகக் குழு மீது நல்ல அன்பு உண்டு. உண்மையில் இவர்கள் இருவரும் இந்துக்கள். புத்தர்கள் அல்ல. புத்த விகாரையில் தங்கி இருந்தாலும், இறை வழிபாடு செய்கிறார்கள். நாகை பட்டிணத்து கோவிலுக்கு அடிக்கடி தானம் கொடுக்கிறார்கள். கிட்டத்தட்ட இரண்டாயிரம் கழஞ்சு. சீனக் கழஞ்சுகள் இவர் கோவிலுக்கு கொடுத்திருக்கிறார்" என்று குருதத்தன் நோக்கி வணிகர்கை காட்டினார்.

"நல்லது, வணிகரின் வாக்கை எடுத்துக் கொள்கிறேன். உங்களை சிறை பிடிக்கவில்லை. நீங்கள் தாராளமாக ஊர் திரும்பி போகலாம். அதற்கேற்ற பருவம் வரும் வரை நாகையில் தங்கி இருக்கலாம். நாகை விகாரம் தாண்டி வேறு எங்கேயும் நீங்கள் நால்வரும் போகக்கூடாது. அங்கேயே இருக்க வேண்டும்.

ஆனால் இந்த இரண்டு புத்த பிட்சுக்களும், சங்கிராம விஜயோத்துங்க வர்மனை நேரில் சந்தித்து வெகு நிச்சயம் உள்ளே நுழைந்து ஸ்ரீ விஜயத்தை அழிப்பேன் என்று சொல்லுங்கள். இதை ஆணையிட்டு இருக்கிறேன் என்று சொல்லுங்கள். இதை சபதம் செய்திருக்கிறேன் என்று சொல்லுங்கள்.

நீங்கள் போய் வரலாம். என்னுடைய அன்பளிப்பாக சோழ தேசத்து புதிய கழஞ்சுகள்" என்று சொல்லி, சமீபத்தில் புத்தர் சிலையை உருக்கி கொடுக்கப்பட்ட கழஞ்சுகளை கொடுத்தார்.

"இந்த கழஞ்சுகள் புத்தம் புதியவை."

"ஆமாம், பார்த்தால் அப்படித்தான் தெரிகிறது."

"முழங்கை உயர புத்தர் சிலை இலங்கையிலிருந்து கொண்டு வந்தோம்."

"ஆமாம். நீங்கள் எடுத்துப் போனதாக கேள்விப்பட்டோம்."

"அந்த சிலையை உருக்கி, அதில் அடித்த காசு இது. போய் சங்கிராம விஜயோத்துங்க வர்மனிடம் சொல்லுங்கள்" ஆளுக்கு இருபத்தைந்து கழஞ்சுகள் கொடுக்கப்பட்டது. அவர்கள் குனிந்து வணங்கினார்கள். விடை பெற்றார்கள்.

"சிறையில் அடைக்க தேவையில்லை என்கிறீர்களா மன்னா."

"இல்லை. இவை வெறும் பசுக்கள். பசுக்களை சிறையிலிட்டு என்ன செய்வது, நம் எண்ணம் ஸ்ரீ விஜயம் நோக்கி இருக்க வேண்டும். அதற்கு முன்னால் வேங்கியில் நமது குழந்தையை பட்டமளிப்பு விழா செய்ய வேண்டும். வேங்கிக்கு எப்படி போவது என்பது பற்றி இனி யோசிக்க வேண்டும். நாளை காலையில் வேங்கி நோக்கி போக வேண்டும். எனவே இப்பொழுது போய்விட்டு மறுபடியும் இரவு நேரம் வந்து சேருங்கள். அப்பொழுது வேங்கி தேசத்து படை எடுப்பை பற்றி விரிவாக பேசுவோம். எப்படி படை எடுக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு தெளிவாக இருக்கிறது. உங்களிடம் சொல்வது மட்டும்தான் இருக்கிறது."

சபை மௌனமாக இருந்தது.

"அருண்மொழி என்ன நினைக்கிறாய்."

"எது பற்றி மன்னா."

"இந்த நால்வரையும் விடுவித்தது உனக்கு ஒப்புமையானதா."

"நிச்சயம் ஒப்புமையானது. இவர்களை வைத்துக் கொண்டு நாம் எதையும் சாதிக்க முடியாது. சிறையில் உண்டு பொழுதை கழித்துக் கொண்டிருப்பார்கள். இவர்களை சிறை வைத்ததே நாம் செய்த பெரிய குற்றமாக இருக்கும். எனவே இவர்களை சந்தித்தோம், விடுவித்தோம் என்பதுதான் நல்ல மதிப்பு.

நீங்கள் சொன்னது போல நாகை விகாரத்தில் இவர்கள் சிறை வைக்கப்படட்டும். இவர்கள் எங்கும் போகக்கூடாது என்று நம்முடைய ஆட்கள் இரகசியமாக காவல் காக்கட்டும். மீறி நகர்ந்தால் மடக்கி உள்ளே இழுத்து போடட்டும்."

"கிருஷ்ணன் ராமன் அவர்களே இந்த வேலையை நீங்கள் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று சொல்ல,

சபை கலைந்தது.

அவசர அவசரமாக எல்லா தளபதிகளும் அவர்கள் வீடு நோக்கி போனார்கள்.

அரண்மனைக்குள் நுழைந்து பரவையின் அறைக்குள் நுழைந்தபொழுது

கட்டிலில் உட்கார்ந்திருந்த வீரமாதேவி எழுந்து வந்து அவரை வழிமறித்தார்.

"என்ன வீரமாதேவி, என்ன கோவம்."

"நான் கோவமாக இருக்கிறேன் என்று யார் சொன்னது."

"நீ வழி மறிக்கின்ற விதத்திலேயே இருக்கிறது."

"என்னை அழைத்துக் கொண்டு போகப் போவதில்லையா."

"எங்கே."

"போருக்கு."

"எதற்காக."

"ஏன்? எத்தனை போர்களில் நான் கலந்து கொண்டு இருக்கிறேன். இந்த போரில் மட்டும் என்ன குறைவு."

"குறை இருக்கிறது. உடல்நலம் சரியில்லை. எனவே நீ வேண்டாமென்று முடிவு செய்திருக்கிறேன்."

"உங்கள் அருமை தங்கையை நோகாமல் கூட்டி வந்தேனே அதற்கு உண்டான பரிசா."

"இல்லையே நோகாமல் கூட்டி வரவில்லை. கூட்டி வந்தபிறகு நொந்து நூலாகிப் போனாய். உன்னை உயிரோடு பார்ப்போமா என்று பதறிவிட்டேன். என்னை விட அதிகம் பதறியது பரவையும், முக்கோன கிழானடிகளும்.

நான் கர்ப்பிணியோ என்ற சந்தேகம் இருந்தது. ஆனால் நான் கர்ப்பிணி என்று எனக்குத் தெரியாது. இது கலைந்து போனதற்கு இப்படிப்பட்ட தண்டனையை கொடுக்காதீர்கள். நான் ஏற்கனவே துக்கத்தில் இருக்கிறேன். நீங்களும் அருகில் இல்லையென்றால் எனக்கு பைத்தியம் பிடித்துவிடும்."

"நிச்சயமாக உன்னை வேங்கி தேசத்திற்கு அழைத்துப் போகப் போவது இல்லை."

வீரமாதேவி முகத்தை பொத்திக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

"குந்தவையைப் போல நீயும் நாடகமாடாதே வீரமாதேவி. உன்னை அழைத்துப் போக விரும்புபவன் நான் என்று உனக்குத் தெரியும். பல போர்களில் உன்னை தயார் செய்து அழைத்துப் போயிருக்கிறேன். இப்பொழுது உன் உடல்நலம் சரியில்லை. உனக்கு வேறு சில வேலைகள் இருக்கின்றன. உன் உடல்நலம் தேறியதும் இடையறாது இடையறாது தஞ்சை பக்கம் சுற்றி வர வேண்டும். பாண்டிய தேசத்தை கவனிக்க வேண்டும். இலங்கையிலிருந்து படைகள் வருகின்றனவா என்று கவனிக்க வேண்டும். அம்மாதிரியான இடங்களுக்கு நீ பயணப்பட வேண்டும். நீ பயணப்படுவதற்கு துணையாக."

"பரமன் மழபாடியார் இருப்பார். அப்படித்தானே."

"ஆமாம்."

"வயதானவர்களுக்கு துணையாக நான். எனக்கு துணையாக வயதானவர்கள். போருக்கு மட்டும் நீங்கள் கிளம்பி போய் விடுவீர்கள்."

"உன்னால் போர்முனைக்கு வர முடியாது. மறுபடியும் தொந்தரவு வந்து சேரும். உன்னை இடைஞ்சலில் மாட்டிவிட்டு என்னால் நிம்மதியாக போர் செய்ய முடியாது."

"அப்படியானால் யாரை அழைத்துப் போகப் போகிறீர்கள்."

"இதுவரை அப்படி எண்ணம் இல்லை. ஆனால் நீ கேட்ட பிறகு ஒரு எண்ணம் வருகிறது."

"என்ன?"

"பரவையை அழைத்துப் போனால் என்ன."

"ஹா, எனக்குத் தெரியும். இந்த மாயக்கள்ளி மயக்கி வைத்திருக்கிறாள் என்று தெரியும்."

"அப்படியா. அப்படி மயக்கி வைத்திருக்கிறேன் என்று அவள் சொன்னாளா. பரவை நீ என்னை மயக்கி வைத்திருக்கிறாயா, என்னோடு போர்முனைக்கு வருவதற்கு ஆயத்தங்கள் செய்திருக்கிறாயா."

"நான் ஒரு பாவமும் அறியாதவள். போர்முனைக்கு என்னை அழைத்துப் போவீர்கள் என்று கற்பனை கூட நாம் செய்ததில்லை. இப்போதும் கூட வேண்டாம் என்றால் நிம்மதியாக இருப்பேன். வரவேண்டும் என்றால் உங்களை கட்டளைக்கு கீழ்ப்படிந்து வருவேன்."

"வர வேண்டும் பரவை, நிச்சயம் வர வேண்டும். சோழ தேசத்து மகாராணிகள் உண்டு, உறங்கி கழிப்பவர்கள் அல்ல. அவர்களுக்கு மிகப்பெரிய பொறுப்பு இருக்கிறதென்று தெரிய வேண்டும். உன்னை வெறும் நடனமணியாக நான் கருதவில்லை. போர்முனையின் கோரத்தை, போர்முனையின் வேகத்தை, ஆத்திரத்தை நீ தெரிந்து கொள்ள வேண்டும். உனக்கு துணையாக வீரர்களோடு வைத்தியர்கள் வருவார்கள். அந்த வைத்தியர்களை பார்த்து பேசி, அந்த வைத்திய முறையைப் பற்றி மெல்லியதாகக் கற்றுக் கொண்டு, அந்த வைத்தியர்களை படைகளின் எல்லா பக்கத்திற்கும் அனுப்ப வேண்டிய ஒரு பெரும் பொறுப்பு உனக்கு இருக்கிறது.

இதை எல்லாம் நான் கவனிக்க முடியாது. எனக்கு நேரமில்லை. எனவே, என்னோடு நீ பயணப்படாது, வைத்தியர் குழுவோடு நீ பயணப்படுவாய். அதாவது எனக்கு முன்பே நீ போய் விடுவாய். உனக்கும் எனக்கும் மூன்று காத இடைவெளி இருக்கும்."

"நான் எதன்மீது சவாரி செய்ய வேண்டும், குதிரையிலா."

"இல்லை. யானையில். அம்பாரி போட்டு திரைச்சீலை போட்ட யானையில் நீ வர வேண்டும். அதற்குள் நீ படுத்து உறங்கலாம். வைத்தியம் சம்பந்தப்பட்ட ஓலைகளை படித்து வரலாம். கீழே இறங்கி வைத்தியர்களோடு பேசலாம். என்ன விதமான வேதனைகள் மற்றவர்களுக்கு உண்டாகும் என்பதை கேட்டு தெரிந்து கொள்ளலாம். நீ வர வேண்டும் என்பது முக்கியம். இது என் கட்டளை." இராஜேந்திர சோழர் பரவையை விட்டுவிட்டு வீரமாதேவியிடம் வந்தார்.

தோளை அணைத்துக் கொண்டார்.

"உன்னை வெறுப்பேற்றுவதற்காக நான் பரவையை அழைத்துப் போகவில்லை. நீ செய்ய வேண்டிய காரியத்தை அவளை செய்யச் சொல்லி இருக்கிறேன். இந்த முறை பெரும் படை வரப்போகிறது. அதற்கு எதிர்ப்பும் கடினமாக இருக்கும்."

